# நமது மாகாணத்தின் சகல பண்டங்களுக்கும்
# புதிய போக்கு வரத்து சாதனங்கள்

கீழ்க்கண்ட ஊர்களிலிருந்து ஊர்களுக்கு லாரி மூலம் உங்களுடைய வியாபார விவசாய பண்டங்களை வீட்டுக்கு வீடு கொண்டு போய்ச் சேர்க்க ஏற்பாடு செய்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஸ்ரீ ராமவிலாஸ் சர்வீஸ் லிமிடெட்

## 202/203, மௌண்ட் ரோடு, மதராஸ்.

போன்: மதராஸ் "8536" :: தந்தி: "ROADHAUL" மதராஸ்

கிளை ஆபீஸ்கள்:

1. சூரமங்கலம் ரோடு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்.
2. ராஜவீதி, கோயமுத்தூர். :: ::
3. கண்டோன்மெண்ட், திருச்சிராப்பள்ளி. ::
4. கிருஷ்ணராயர் தெப்பகுளத் தெரு, மதுரை. ::
5. 29 A. சௌத்பேரேட் பெங்களூர். ::

—— : *மார்க்கங்கள்* : ——

1. மதராஸ் — சித்தூர் — பெங்களூர்
2. மதராஸ் — வேலூர் — சேலம் — கோயமுத்தூர்
3. மதராஸ் — திருச்சி — மதுரை — திருநெல்வேலி
4. கோயமுத்தூர் — கள்ளிக்கோட்டை
5. கோயமுத்தூர் — கரூர் — திருச்சினாப்பள்ளி
6. சேலம் — நாமக்கல் — திருச்சினாப்பள்ளி
7. சேலம் — உளுந்தூர்ப்பேட்டை — கடலூர்
8. மதுரை—திருச்சினாப்பள்ளி—தஞ்சாவூர் — நாகை
9. மதுரை — திருச்சி — கும்பகோணம் — நாகை



உங்களது பணியைச் செய்ய எப்போதும் காத்துள்ளோம்.

# கொலம்பியா ரிகார்டுகளில்



## மனோன்மணி

டாக்கி பாட்டுகள்

T.R. ராஜகுமாரி பாடியது

GE.6052 — ஆனந்தமே / மன்னன் இவராரோ

காளி N. ரத்னம்
C.T. ராஜகாந்தம் பாடிய



GE.6053 — கண்டது முதல் / ஜோரான டில்லி

லலிதா
வெங்கட்ராமன்
பாடிய

GE.6059
வேணுகூவுது
மயிலே

G.H. RAO

## ஜீவன் நாடக்

கன்னட பாட்டுகள்

G.H. வீரண்ணா
B. ஜயம்மா
S.V. வெங்கட்ராம்
மோஹனகுமாரி
முதலியோர் பாடியது
GE. 6060 TO 6064



## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி

## இண்டியன் பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடி

மதராஸ்

# கோகலே ஹாலில்

ஜனவரி மாதத்திய கச்சேரி

24-1-43 ஞாயிற்றுக்கிழமை

மாலை 5-30 மணிக்கு

இசையரசு

எம். எம். தண்டபாணி தேசிகர் —பாட்டு

ஸ்ரீ வி. சேதுராமய்யா —பிடில்

,, கல்பாதி ராமநாதன் —மிருதங்கம்

,, வில்வாதிரி ஐயர் (பாலக்காடு)—கடம்

கட்டணங்கள் :

புருஷர்கள் : ரூ. 3, 2, 1 & அணா 8

பெண்கள் : ரூ. 2, 1 & அணா 8.

## ஸ்டெட்



கிராமபோன் ஊசிகள்




கடையில் கிடைக்கும் ஊசிகளில் சிறந்தது.

*Made in England by J. STEAD & CO. LTD. SHEFFIELD*

# இந்தியாவும் விடுதலையும்

ரைட் ஆனரபில் எல். எஸ். அமெரி (பர்மா இந்தியக் காரியதரிசி) செய்த பன்னிரண்டு பிரசங்கங்கள்

முழுதும் துணி பைண்ட் செய்யப்பட்ட கிரௌன் ஆக்டேவோ ஸைஸில்

**128 பக்கங்கள் கொண்டது விலை ரூ. 3**

•

"இதில் எழுதப்பட்டிருக்கும் விஷயத்துக்காகவும் இதன் ஆசிரியருக்காகவும் இந்தப் புத்தகத்தை ஒவ்வொருவரும் படிக்க வேண்டும். இந்தப் புத்தகத்தைப் படித்த எவரும் இந்தியப் பிரச்னையைப் பற்றி வாயே திறக்க மாட்டார்கள்." அகில இந்திய ரேடியோ — டக்கா.

## ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடி ப்ரெஸ்

சுயமாக வெளுக்கும் நுரை என்பது என்ன?

ஸன்லைட் கெமிஸ்டு சொல்லுகிறார் . . .

"அசுத்தமான ஆடைகளிலிருந்து அழுக்குகளை தானாகவே போக்கக்கூடிய நுரைக்கே சுயமாக வெளுக்கும் நுரை என்று பெயர். அது எப்படி வேலை செய்கிறது? ஸன்லைட் நுரையில் "பிராணசக்தி" வாய்ந்த சோப் இருக்கிறது. 'பிராணசக்தி' வாய்ந்த சோப்பிற்கு அழுக்கைப் போக்கக்கூடிய சக்தி நிறைந்திருக்கிறது. அது தொட்ட உடன் அழுக்கைப் பற்றிக்கொண்டு தன்னுடன் அழுக்கை எடுத்துவிடுகிறது. ஆகையால் அழுக்கடைந்த ஆடைகளை ஸன்லைட் நுரையினால் கசக்கினால் இந்த 'பிராணசக்தி'யானது உடனே வேலை செய்து நுரையை தண்ணீரில் அலசின உடன் அழுக்குப் போய்விடுகிறது."

# ஸன்லைட் சோப்

## சுயமாக வெளுக்கும் நுரை உடையது




S. 62-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு

# அறிவிப்பு

ஸர் எம். ஸிடி. முத்தையா செட்டியார் எண்டௌமெண்ட் பண்டின் சார்பாக "லைப் இன்ஷுரன்ஸும், அவைகளின் இன்றியமையாமையும்" என்னும் தலைப்புடன் தமிழில் சிறு கதைகள் எழுதி யனுப்பும்படி சென்ற வருஷம் பிரசுரம் செய்த பரிசு திட்டத்தின் தீர்மானத்தை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறோம். கீழ்க் குறிப்பிட்டுள்ளவர்கள் அப்பரிசிற்கு உகந்தவரென தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு : | | ஸ்ரீ S. K. கணேசன், B. A., அஸிஸ்டெண்ட், யுனைடெட் இந்தியா லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி-லிமிடெட்., தலைமை ஆபீஸ் — மதராஸ். |
| இரண்டாம் பரிசு : | (1) | ஸ்ரீ K. சுவாமிநாதன், "ஷண்முக விலாஸம்" ஸாலை ரோடு, உறையூர் போஸ்ட், திருச்சினுப்பள்ளி. |
| do | (2) | ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி வெங்கட்ராம் C/o ஸ்ரீ S. K. அய்யர் சமஸ்தான மக்கானிகல் இன்ஜினியர், 6592/8, ஹிமாயத் நகர், ஹைதராபாத் — டக்கான். |
| do | (3) | ஸ்ரீ P. L. ஷண்முகம் C/o ஜுபிடர் பிலிம்ஸ், 4, சரவண முதலி தெரு, தியாகராயநகர், மதராஸ். |
| do | (4) | ஸ்ரீ V. ராமமூர்த்தி, C/o T. S. வெங்கடராம அய்யர், B. A. B. L. வக்கீல், திருப்பத்தூர், வட ஆற்காடு ஜில்லா. |

## யுனைடெட் இந்தியா

### லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்.

"யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்ஸ்"

எஸ்பிளனேட் :: மதராஸ்

அதிக தேக புஷ்டிக்கு உங்கள் ஆகாரங்களை

# டால்டாவினால்

தயாரியுங்கள்

# DALDA



**ஏனெனில் டால்டாவினால் தயாரிக்கப்பட்ட ஆகாரம் தேக பலத்தை அதிகமாக்குகிறது**

டால்டாவில் ஜீவ சத்து அதிகமாய் இருப்பதால் அதனால் தயாரித்த ஆகாரம் மிக உயர்ந்ததாய் இருக்கிறது. மற்ற உணவுப் பொருள்களில் இல்லாத ஜீவ சத்து டால்டாவில் அடங்கியுள்ளது. டால்டா உணவுப் பொருள்களை ருசிகரமாகவும், குடும்பத்தில் யாவருக்கும் ஜீரணிக்கக் கூடியதாகவும் செய்கிறது.




- டால்டா மிகவும் சுத்தமானது
- டால்டா மிருகக் கொழுப்பில்லாதது
- டால்டா விலை குறைவு-நீடித்த காலம் உபயோகிக்கக் கூடியது
- டால்டா முத்திரையிட்ட டின்களிலேயே விற்கப்படுகிறது. 1 பவுண்டு, 2 பவுண்டு, 5 பவுண்டு, 10 பவுண்டு
- சுத்தத்திற்கு ரூ. 1,000 உத்தரவாதம்

டால்டாவினால், உங்கள் ஆகாரங்களை, பொரியல், சமையல் முதலியவை செய்யுங்கள்

HVM. 15-23 TM

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO. LTD., BOMBAY

# கல்கி பொருளடக்கம்

மலர் 2 இதழ் 18 | 1943 ஜனவரி 20 | சித்திரபானு ௵ தைமீ 7உ








ஹிந்துக்களுக்குக் காசி க்ஷேத்திரம் எப்படியோ, முஸ்லிம்களுக்கு மெக்கா எப்படியோ, கிறிஸ்துவர்களுக்கு ஜெருஸலம் எப்படியோ, அப்படிக் கர்நாடக சங்கீத வித்வான்களுக்குத் திருவையாறு க்ஷேத்திரம். ஸ்ரீ தியாகப் பிரம்மம் எழுந்தருளியிருந்து, பக்தி ததும்பும் அற்புத ஸாஹித்யங்களைச் செய்து, கடைசியில் சமாதியடைந்தது இந்தப் புண்ணிய ஸ்தலத்தில்தான். எனவே, நமது சங்கீத வித்வான்கள் வருஷந்தோறும் அங்கே தை மாதம் பகுள பஞ்சமி திதியில் ஸ்வாமிகளின் ஆராதனை உற்சவத்தை மிக்க பக்தி சிரத்தையுடன் நடத்தி வருகிறார்கள். சாதாரணமாக ஐந்து தினங்கள் சிறப்பாக நடைபெறும் உற்சவம் இந்த வருஷம் (திருவையாற்றின் அக்கம் பக்கத்தில் சுகாதாரக் குறைவு காரணமாக) நாளது 26உ ஒரு நாள் மட்டும் சிறப்பாக நடைபெறுகிறது. நமது இந்த இதழ் அட்டைப் படத்தில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் திருவுருவப் பட ஊர்வலக் காட்சியைக் காணலாம். விமானத்தைத் தூக்கும் கைங்கரியம் செய்கிறவர்கள் பெரிய பெரிய சங்கீத வித்வான்கள் என்பதைக் கவனியுங்கள்.

ஸ்ரீரங்கபட்டிணம் பாலம்

'இந்த சரித்திரப் பிரஸித்தமான பாலம் ஆத்ம சுத்திக்காக காவேரி புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யப் போகும் ஆயிரக்கணக்கான ஜனங்களின் மனதிற்கு ரொம்ப பிடித்தமான நடமாட்ட ஸ்தலமாகும்.

இந்தியாவில் எங்கும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் தேக சுத்திக்காக குளிர்ச்சியானதும் உற்சாக மூட்டுவதுமான ஹமாம் ஸோப்பையே உபயோகிக்கவும் செய்கிறார்கள்.






ஹமாம் ஸோப்பின் புது வடிவத்தை கவனிக்கவும்

டாம்கோ விற்பனை இலாகா
1, வாரன் ரோடு, பீமன்னப்பேட்
மயிலாப்பூர் :: மதராஸ்

# ஹமாம்

உங்கள் ஸ்நானத்திற்குகந்த
பெரிய ஸோப்பு

TS. 2043




# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்


# என்ன சேதி?

## சீனத்தின் வெற்றி

சீன தேசத்தில் பிரிட்டிஷார், அமெரிக்கர் முதலியோர் சில விசேஷ உரிமைகளை வெகு காலமாக அநுபவித்து வந்தார்கள். மேற்படி உரிமைகள் சீன தேசத்தின் சுதந்திரத்தைப் பாதிப்பனவாயிருந்தன. அந்த உரிமைகள் ரத்தாக வேண்டுமென்று 1921-ம் ஆண்டில் சீன சர்க்கார் கோரினார்கள். பிறகு, இடைவிடாது வற்புறுத்தி வந்தார்கள். அந்தக் கோரிக்கை இருபது வருஷத்துக்குப் பிறகு சென்ற வாரத்தில் நிறைவேறியது. பிரிட்டிஷாரும், அமெரிக்கர்களும் சீனாவில் தங்களுக்கிருந்த விசேஷ பாத்தியதைகளையெல்லாம் விட்டுக் கொடுத்ததாக அறிவித்து விட்டார்கள்.

இதிலிருந்து இரண்டு விஷயங்கள் வெளியாகின்றன. ஒன்று, பிரிட்டிஷ்-அமெரிக்கர் எப்பேர்ப்பட்ட கொடாக் கண்டர்கள் என்பது! இன்னொன்று, சியாங்-காய்-ஷேக் எப்பேர்ப்பட்ட விடாக்கண்டர் என்பது! இந்த மகா பயங்கர யுத்தத்தில் சீனா, பிரிட்டிஷ்-அமெரிக்கக் கட்சியில் நின்று எவ்வளவோ வீர தீரத்துடன் போராடி வருகிறது. உலகத்தின் நாலு பெரிய வீரர்கள் என்று சர்ச்சில், ரூஸ்வெல்ட், ஸ்டாலின், சியாங்-காய்-ஷேக்—இவர்களைக் குறிப்பிடுவது வழக்கமாயிருந்து வருகிறது. இப்படியெல்லாமிருந்தும் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் தங்களுடைய விசேஷ சீன உரிமைகளை விட்டுக் கொடுக்க இத்தனை நாள் பிடித்தது! "அந்த விசேஷ உரிமைகளால் இனிமேல் தங்களுக்குப் பிரயோஜனம் இல்லை" என்ற நிலைமையில்தான் விட்டுக்கொடுத்தனர். ஆனால், இந்த பிரிட்டிஷ்—அமெரிக்கத் தயக்கத்தினால் சியாங்-காய்-ஷேக் மனச் சோர்வு அடைந்து விட்டாரோ? அதனால் சீனாவுக்கும் பிரிட்டிஷ் — அமெரிக்காவுக்கும் உள்ள நட்பில் குறைவு வந்துவிட்டதாகக் காட்டிக் கொண்டாரோ? இல்லவே இல்லை. ஒரு பக்கத்தில் அத்தியந்த சிநேகம் பாராட்டி அவர்கள் கொடுக்கும் உதவியையெல்லாம் பெற்றுக்கொண்டு, மற்றொரு பக்கத்தில் சீனத்தின் பூரண விடுதலையைப் பொறுமையுடன் வற்புறுத்திக் கொண்டு வந்தார். கடைசியாக, காரியத்தில் ஜயித்தார். இந்த யுத்தத்தைச் சீனாவின் நன்மைக்குப் பூரணமாக உபயோகித்துக் கொண்டிருக்கும் மகா இராஜதந்திரி சியாங்-காய்-ஷேக் என்றுதான் சொல்ல வேண்டும். அப்படிப்பட்டவருடைய வெற்றியில் பூரண மகிழ்ச்சியடைந்து அவருக்கு வாழ்த்துக் கூறக் கூடியவரான பண்டித ஜவாஹர்லால்ஜி இன்றைய தினம் சிறையில் இருப்பது எத்தகைய துர்ப்பாக்கியம்?

## சந்தோஷச் செய்தி

ஜனவரி மாதம் 12-ந் தேதி பத்திரிகையைப் படித்து விட்டு நாடெங்கும் மகாஜனங்கள் 'அப்பாடா!' என்று பெரு மூச்சு விட்டார்கள். முகத்தில் அரும்பியிருந்த வியர்வையைத் துடைத்துக்கொண்டு, ஆசுவாசப் படுத்திக் கொண்டார்கள். ஏனென்றால், அன்றைக்குத்தான் இத்தனை நாளாய் அவர்கள் மனத்தில் உறுத்திக்கொண்டிருந்த கேள்விக்கு விடை கிடைத்தது.

"ஆசிரியர் பன்ஸாலி உயிரோடு இருக்கிறாரா, இல்லையா?" என்பதுதான் அந்தக் கேள்வி. பத்திரிகைகளில் பன்ஸாலியைப் பற்றிய செய்தி ஒன்றும் வராமலிருந்தபடியால் அவர்களுடைய மனக் கலக்கம் அதிகமாயிருந்தது. காற்றுவாக்கில் பன்ஸாலியின் உண்ணாவிரதத்தைப் பற்றிப் பலவித வதந்திகள் பரவ ஆரம்பித்தன.

இந்த நிலையில்தான், ஆசிரியர் பன்ஸாலி உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டார் என்ற சந்தோஷச் செய்தி வெளியாயிற்று.

ஆசிரியர் பன்ஸாலி மொத்தம் அறுபத்து மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார். உண்ணாவிரதத்தை முடிப்பதற்கு முன் சில நாட்கள் ஜலபானம் கூடச் செய்யாமல் இருந்தார். எதற்காக பன்ஸாலி இத்தகைய கொடிய சோதனையில் இறங்கினார்?

மத்திய மாகாணத்தில் சிமூர் என்ற இடத்தில் ராணுவமும் போலீஸாரும் சில அதிக்ரமமான காரியங்களைச் செய்ததாகவும், ஸ்திரீகளை மானபங்கப் படுத்தியதாகவும், இதைப்பற்றி சர்க்கார் பகிரங்க விசாரணை செய்யவேண்டும் என்றும் பன்ஸாலி கோரினார். இந்தக் கோரிக்கைக்கு சர்க்கார் அசையவில்லை. ஆனைப்பட்ட ஆனை கூட "என்னால் ஒன்றும் செய்ய முடியாது" என்று கையை விரித்து விட்டார். அதன் பிறகு தான், பன்ஸாலி உண்ணாவிரதம் ஆரம்பித்தார். மத்திய மாகாண அரசாங்கம் அதற்கும் மசிகிற வழியாயில்லை. ஆனால், இம்மாதிரி காரியங்களில் மத்தியஸ்தம் செய்யச் சிலர் முன்வந்தே தீர்வார்களல்லவா? டாக்டர் காரேயும், ஸ்ரீ முன்ஷியும் அந்தக் கடமையை மேற்கொண்டார்கள். கடைசியில், ஒரு சமரச முடிவு ஏற்பட்டது. பன்ஸாலி ஆரஞ்சுப் பழ ரசம் அருந்தினார். ஆனை அவருடைய உயிருக்காகப் பிரார்த்தித்தார். இப்படி எல்லாம் மங்களகரமாக முடிந்தது.

## மகத்தான செயல்

சிமூர் அட்டூழியங்களைப் பற்றிப் பகிரங்க விசாரணை நடத்த வேண்டுமென்று பன்ஸாலி உண்ணாவிரதம் ஆரம்பித்தார். அது நிறைவேறவில்லை, ஆனால், உண்ணாவிரதத்தினால் வேறு பலன்கள் ஏற்பட்டன. சிமூர் சம்பவம் தேசத்தின் கவனத்தைக் கவர்ந்தது. மத்திய மாகாண சர்க்கார், ஸ்திரீகளின் கௌரவத்தில் தங்களுக்குள்ள மதிப்பு வேறு யாருக்கும் இல்லையென்றும், இனிமேல் ஸ்திரீகளின் கௌரவத்தைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாப்போம் என்றும் ஒப்புக் கொண்டார்கள். பன்ஸாலி சிமூருக்குத் தங்கு தடையின்றிப் போகலாமென்றும் தெரிவித்தார்கள். பலாபலன்கள் ஒருபுறமிருக்க, பெண் குலத்தின் கௌரவத்தைப் பாதுகாக்கும் பொருட்டு ஆசிரியர் பன்ஸாலி

## சண்டையும் முடிவும்!









63 நாள் உண்ணு விரதம் இருந்தது ஒப்பற்ற மகத்தான செயலாகும். இந்தியப் பெண் குலமும், பெண் குலத்தின் கௌரவத்தில் சிரத்தையுள்ளவர்களும் பன்ஸாலியை என்றென்றைக்கும் நன்றியுடன் வாழ்த்துவார்கள்.

## ஏன் கூடாது?

பன்ஸாலி உண்ணு விரதத்திலிருந்து ஒரு உப யுத்தம் எழுந்தது—பத்திரிகைகளுக்கும் சர்க்காருக்கும். உண்ணு விரதச் செய்திகளைப் போடக்கூடாது என்று சர்க்கார் தடைவிதித்தார்கள். "சர்க்கார் அறிக்கைகளைப் போட மாட்டோம்" என்று பத்திரிகைகள் பதில் 'ஸவால்' விடுத்தன. சென்னை சர்க்கார் தங்கள் காரியாலயங்களில் "பத்திரிகை நிருபர்கள் நுழையக் கூடாது" என்று உத்தரவு போட்டார்கள். பன்ஸாலியின் உண்ணுவிரதம் முடிவடையவே, மேற்படி பத்திரிகை யுத்தத்தின் அஸ்திவாரம் போய்விட்டது. சர்க்கார் தங்கள் தடையை நிவர்த்தி செய்ய, பத்திரிகைக்காரர்கள் தங்கள் பதில் ஸவாலை வாபஸ் பெற, சென்னை சர்க்காரும் தங்கள் காரியாலய வாசலில் "நாய் ஜாக்கிரதை!" என்ற போர்டை மாற்றி, "நாய் கடிக்காது!" என்று போர்டு போட்டார்கள். இவ்விதம், தடபுடலாக ஆரம்பித்த பத்திரிகை யுத்தம் 'புஸ்' வாணமாகப் போய் விட்டது. ஆனாலும், இந்தச் சின்ன யுத்தத்திலிருந்து ஒரு விஷயம் தெளிவாயிற்று. பத்திரிகைக்காரர்கள் மட்டும் ஒற்றுமையாக முயன்றால், சர்க்காரை ஒரு ஆட்டு ஆட்டிவிடலாமென்று தெரிந்தது. எனவே, அதிகார வர்க்க அநீதிகளை நிவர்த்திக்கும் விஷயத்தில் பத்திரிகைகள் ஏன் தங்கள் பலத்தைப் பரீட்சை பார்க்கக் கூடாது? மகாத்மா காந்தியைச் சிறையில் அடைத்திருப்பது பெரிய அநீதி என்பதை எல்லாப் பத்திரிகைக் காரர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். அப்படியானால், மகாத்மாவை விடுதலை செய்தாலன்றி வைஸராய், கவர்னர்களைப் பற்றிய எந்தச் செய்திகளையும் போடமாட்டோம் என்று நமது பத்திரிகைகள் ஏன் ஒரு சங்கல்பம் செய்து கொள்ளக் கூடாது?

## இப்படி ஒரு பைத்தியமா?

சென்ற சில காலமாகத் தமிழ் நாட்டில் 'சுயமரியாதை'க்காரர்களின் கூச்சலே இல்லாமலிருந்தது. அவர்கள் கூச்சல் போட்டாலும் கேட்பார் இல்லாமலிருந்தது. அந்த இயக்கத்தைச் சேர்ந்த சிலர் பார்த்தார்கள். "இப்படி அடியோடு நம்மை எல்லோரும் மறந்து விடுவதா?" என்று ஆத்திரப்பட்டு ஒரு சூழ்ச்சி செய்தார்கள். "சேலத்தில் சுயமரியாதை மகாநாடு கூட்டப் போகிறோம்; கம்ப ராமாயணத்தையும், பெரிய புராணத்தையும், மனுநீதியையும் கொளுத்தப் போகிறோம்" என்றார்கள். "ஆகா! இதென்ன அக்கிரமம்?" என்று நாடெங்குமுள்ள தமிழன்பர்களும், சைவ வைஷ்ணவ சித்தாந்திகளும் கொதித்தெழுந்தார்கள். பொதுக் கூட்டம் போட்டுக் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். மேற்படி அக்கிரமச் செயலை சர்க்கார் தடை உத்தரவு போட்டுத் தடுக்கவேண்டும் என்றார்கள். சர்க்கார் அதிகாரிகளுக்கு மகஜர்களும் அனுப்பினார்கள். 17உ சேலத்தில் மேற்படி புத்தக தகனம் நடப்பதாக இருந்தது. அது என்னவாயிற்று என்று இதை நாம் எழுதும் போது விவரம் கிடைக்கவில்லை. ஆனால், சுயமரியாதைக்காரர்கள் தங்களுடைய நோக்கத்தை ஒருவாறு நிறைவேற்றிக் கொண்டார்கள். நமது தேசத்தில் "பண்டிதன் பின்னால் பத்துப் பேர்; பைத்தியக்காரன் பின்னால் பத்துப் பேர்" என்ற பழமொழி இருக்கிறதல்லவா? இதில் இரண்டாவது முறையில் பத்துப் பேரைத் தங்களுக்குப் பின்னால் திரட்டிக் கொண்டார்கள்! ஆனால், இப்படிப் பைத்தியக்காரச் செயல் புரிந்தாவது விளம்பரம் தேடிக் கொள்ள வேண்டுமா என்றுதான் தெரியவில்லை. இப்படியும் ஒரு விளம்பரப் பைத்தியமா?


### "கல்கி" ஆண்டு சந்தா

**1943 ஜனவரி 1உ முதல்**

உள்நாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓர் ஆண்டு | ... | ரூ. | 6 | 8 | 0 |
| ஆறு மாதம் | ... | ,, | 3 | 4 | 0 |

இலங்கை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓர் ஆண்டு | ... | ரூ. | 7 | 4 | 0 |
| ஆறு மாதம் | ... | ,, | 3 | 10 | 0 |
| இந்தியாவில் தனிப்பிரதி விலை | | | 0 | 3 | 0 |
| இலங்கையில் தனிப்பிரதி விலை | | | 0 | 3 | 3 |

**தயவுசெய்து கவனிக்கவும்**

ஆறு மாத சந்தாவிற்குக் குறைவாகச் சந்தா ஏற்றுக்கொள்வதில்லை. பழைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தாவைப் புதுப்பிக்கும்பொழுது சந்தா நெம்பரைக் குறித்து அனுப்ப வேண்டும்.


அமெரிக்காவில் ஸர் ஏ. ராமசாமி
முதலியார் அமெரிக்காவின் பாடத்தை
ஒப்புவித்தார்!


மகாத்மா காந்தியார் அரசியலில்
சாந்தியை உபதேசித்து "ஈஸாப் கதையில்
வரும் வெள்ளாட்டைப் போல் நாம் இரு
வேண்டும்" என்றார்.


அமெரிக்காவைப் பின்பற்றி


ருஷ்யா







தேசத்தைச் சரியான வழிக்குத் திருப்ப ராஜாஜி தன்னந்தனியாக முயற்சி செய்து கொண்டிருக்கிறார்.

# வாருங்கோ, துரைவாள்!

இந்த அபாயகரமான காலத்தில் அமெரிக்காவிலிருந்து நெடுந் தூரப் பிரயாணம் செய்து இந்தியா வந்து சேர்ந்திருக்கும் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்டின் சொந்தப் பிரதிநிதி மிஸ்டர் வில்லியம் பிலிப்ஸ் துரைக்கு நல்வரவு கூறுகிறோம்.

இந்த தேசத்துக்கு உங்களுக்கு முன்னால் எத்தனையோ அன்னியர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களுக் கெல்லாம் நல்வரவு கூறி யிருக்கிறோம். உண்மையில் அன்னியர்களுக்கு நல்வரவு கூறுவதில் இந்தியர்களாகிய எங்களுக்கு இணையானவர்கள் இந்த பூலோகத்திலேயே கிடையாது. எங்களுடைய நல்வரவுக்குப் பாத்திரமாகி வருகிறவர்கள்தான் பின்னால் எங்கள் கழுத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டு அமுக்குவது வழக்கம். அதை யெல்லாம் நாங்கள் பொருட் படுத்துவதில்லை. அன்னியர்களுக்கு 'நல்வரவு' கூறுவதை நிறுத்துவதுமில்லை.

தங்களுடைய பிரயாணம் சுகமாயிருந்திருக்கு மென்று நம்புகிறோம். சுகமோ, சுகமில்லையோ, உயிரோடு, முழுசாக வந்து சேர்ந்தீர்களே, அதுவே பெரிய காரியம். தாங்கள் வந்ததும் வராததுமாய், பிரயாணக் களைப்பைக் கூட ஆற்றிக் கொள்ளாமல், தீவிரமாகத் தங்கள் வேலையைத் தொடங்கி விட்டீர்களென்று அறிந்து ''ஆகா! என்ன சுருசுருப்பு! என்ன கடமைப்பற்று!'' என்று நாங்கள் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைகிறோம். அமெரிக்கன் சுருசுருப்பு என்றால், அது அலாதிதான் போலிருக்கிறது. அதிலும் தாங்கள் வேலையில் பெரிய ராட்சதனா யிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. வந்ததும் வராததுமாய் இந்தியப் பிரமுகர்களையெல்லாம் வரிசையாகப் பார்க்கத் தொடங்கி விட்டீர்களாம்! ஸர் மாரிஸ் குவயர், மிஸ்டர் ஓ. கே. காரோ, ஸர் ரெஜினால்ட் மாக்ஸ்வெல், ஸர் ஜெரிமி ரெயிஸ்மான் முதலிய 'இந்திய'ப் பிரமுகர்களைப் பார்த்ததோடு நில்லாமல், மிஸ்டர் எம். எஸ். ஆனே, ஸர் முகமது ஊஸ்மான் முதலியவர்களையும் பார்த்தீர்களாமே? அந்தக் கடைசி மனிதரைப் பார்த்ததிலிருந்தாவது தங்களுக்கு இந்தியாவையும், இந்தியர்களையும் பற்றிப் 'பெரிய' அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கு மென்பதில் சந்தேகமில்லை.

இந்தியப் பிரமுகர்களைப் பார்ப்பதோடு தாங்கள் நிறுத்திக் கொள்ளப் போவதில்லை யென்று தெரிகிறது. இன்னும், பத்திரிகைக்காரர்களுக்கும் பேட்டி கொடுக்கப் போகிறீர்களாம். ரொம்ப சந்தோஷம். ஆனால் நம்மைப் பொறுத்த வரையில், தாங்கள் பேட்டி கொடுக்கும் வரையில் காத்திராமல் தங்களுக்கு முதலில் நாம் பேட்டி கொடுத்து விடுவதென்று தீர்மானித்திருக்கிறோம். தாங்கள் கேள்வி கேட்கும் வரையில் காத்திராமல் சொல்ல வேண்டியதை யெல்லாம் நாமே சொல்லிவிடுகிறோம்.

தங்களுடைய ஜன்ம தேசமாகிய அமெரிக்காவினிடம் எங்களுக் கெல்லாம் அபிமானமும் மரியாதையும் உண்டு.—அதாவது கொஞ்ச நாளைக்கு முன்பு வரை இருந்தது.

ஸ்வாமி விவேகானந்தருக்கு உங்கள் நாட்டார் அந்தக் காலத்தில் அளித்த வரவேற்பை நாங்கள் அடிக்கடி ஞாபகப் படுத்திக்கொண்டு சந்தோஷப் படுவதுண்டு.

இன்னும், எங்களை இன்று எந்த பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஆளுகிறார்களோ, அதே பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்து நீங்கள் நடத்திய சுதந்திரப் போராட்டத்தை நாங்கள் மறப்பது கிடையாது. பாஸ்டன் துறைமுகத்தில் பிரிட்டிஷ் கப்பலிலிருந்த தேயிலைப் பெட்டிகளை யெல்லாம் தூக்கிச் சமுத்திரத்தில் எறிந்தார்களே, உங்கள் மூதாதைகள், அந்த வீரச் செயலைப் படிக்கும் போது எங்களுக் கெல்லாம் மயிர்க் கூச்சல் உண்டாகும். அதன் பிறகு ஏழு வருஷம் பிரிட்டிஷாரோடு உங்கள் முன்னோர் வீர சுதந்திரப் போர் நடத்தி வெற்றி பெற்றதைப் படிக்கும்போது, ஏதோ எங்களுக்கே சுதந்திரப் போரில் வெற்றி கிடைத்து விட்டதுபோல் நாங்கள் சந்தோஷமடைவோம். அந்த வீரப் போரை நடத்திய ஜார்ஜ் வாஷிங்டனிடம் உங்களுக்கு எவ்வளவு பக்தி விசுவாசம் உண்டோ அவ்வளவு எங்களுக்கும் உண்டு.

இன்னும், உங்கள் நாட்டில் அடிமைத்தனத்தை ஒழிப்பதற்காக நடந்த மகத்தான உள்நாட்டுப் போராட்டத்தைப் பற்றியும் நாங்கள் அளவற்ற ஆர்வத்துடன் படிப்பதுண்டு. "அப்ரஹாம் லிங்கன்" என்ற பெயரைக் கேட்டால் எங்களுடைய ஆழ்வார்கள், நாயன்மார்கள் பெயரைக் கேட்டதுபோல் பக்தி பரவசமடைவோம்.

ஆனால், அந்தக்கால மெல்லாம் மலையேறி விட்டது என்பதை மிகுந்த துக்கத்துடன் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். அந்த அபிமானம், மரியாதை யெல்லாவற்றையும், தாங்கள் யாருடைய பிரதிநிதியாக வந்திருக்கிறீரோ, அந்த மகாராஜன் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் போக்கடித்துவிட்டார்! ஜார்ஜ் வாஷிங்டன், அப்ரஹாம் லிங்கன் முதலியோருடைய சந்ததியில் வந்தவர்கள்தானா நீங்கள் என்று சில சமயம் நாங்கள் சந்தேகிக்கிறோம்.

உங்கள் ரூஸ்வெல்ட்டும் எங்கள் சர்ச்சிலும் அட்லாண்டிக் சமுத்திரத்தில் சந்தித்து ஒரு சாஸனத்தைப் பிறப்பித்தார்களே, அந்த நீர்மேல் எழுத்துத் தான் எங்களுடைய நம்பிக்கையை யெல்லாம் சிதற அடித்துவிட்டது.

அந்த சாஸனத்தில் நாலு வகைச் சுதந்திரங்களைப் பற்றி உங்கள் ரூஸ்வெல்ட் பிரஸ்தாபித்திருந்தார். அந்த நாலுவகைச் சுதந்திரங்களும் இந்தியாவுக்கு உண்டா, இல்லையா என்ற கேள்வி இந்நாட்டில் நாலா பக்கங்களிலும் ஆயிரக் கணக்கான குரல்களில் எழுந்தது.

இதற்கு எங்கள் சர்ச்சில் துரை பளிச் சென்று பதில் சொல்லிவிட்டார். "அட்லாண்டிக் சாஸனம் அட்லாண்டிக் சமுத்திரத்துக்குத்தான்; இந்தியாவுக்கு இல்லை" என்று திட்டமாய்க் கூறிவிட்டார்.

"சர்ச்சில் இப்படிச் சொல்கிறாரே, இது நியாயமா? நீங்களும் ஒப்புக் கொள்கிறீர்களா?" என்று ரூஸ்வெல்ட்டைப் பார்த்து இந்தியாவில் லட்சக்கணக்கான குரல்கள் கேட்டன. இதற்கு உங்கள் ரூஸ்வெல்ட் வாயைத் திறந்து இதுவரையில் பதில் சொல்லவில்லை. "இந்தியா" என்ற வார்த்தையே அவர் வாயிலிருந்து தப்பித் தவறிக்கூட வரவில்லை. "இந்தியா" என்றால் வாய் வெந்துபோகும் என்று பயப்படுகிறார்போல் தோன்றுகிறது.

சர்ச்சில் துரை பிற்பாடு இன்னும் ஸ்பஷ்டமாக "பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் கலைத்து விடுவதற்காக நான் பிரதம மந்திரியாக வரவில்லை" என்றார். எனவே, இந்தியாவின் சுதந்திரத்தை ஒப்புக்கொள்ளும் உத்தேசம் லவலேசமும் அவருக்கு இல்லையென்று தோன்றுகிறது.

இதையும் உங்கள் ரூஸ்வெல்ட் துரை கேட்டுக் கொண்டு இடித்த புளி மாதிரிதான் இருக்கிறார்!

இதெல்லாம் அமெரிக்காவினிடம் எங்களுக்கிருந்த மரியாதையும் அபிமானமும் கலகலத்துப் போய் விட்டது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். நீங்களும் பிரிட்டிஷாரைப்போல் உலகாதிபத்தியத்துக்கு ஆசைப் படுகிறவர்கள்—மற்ற நாடுகளைச் சுரண்டிச் செழிப்படைய விரும்புகிறவர்கள் என்ற முடிவுக்கே கிட்டத்தட்ட வந்து விட்டோம்.

இப்படிப்பட்ட நிலைமையில்தான் உங்களைப் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் அனுப்பி யிருக்கிறார். எதற்காக? ஒருவேளை இந்தியாவி லிருந்து வரும் செய்திகள் எல்லாம் ஒன்றுக்கொன்று விரோதமா யிருப்பதால், உண்மை நிலைமையை அறிந்து கொள்வதற்காக உங்களை அனுப்பி யிருக்கலாம்.

அல்லது சிலர் நினைப்பதுபோல் யுத்தத்திற்குப் பிறகு இந்தியாவின் வியாபாரத்தைப் பிரிட்டனுடன் பங்கு போட்டுக் கொள்வது பற்றி இப்போ திருந்தே திட்டம் வகுப்பதற்காக அனுப்பி யிருக்கலாம்.

முதலில் சொன்ன காரணமே சரியான காரணம் என்று நாம் நம்புகிறோம்.

சரி; அப்படியானால் தங்களுடைய கடமையைத் தாங்கள் நிறைவேற்றும் விஷயத்தில் ஒரு எச்சரிக்கை மிகவும் அவசியமாகும்.

மேலெழுந்த வாரியாகப் பார்த்து விட்டுத் தாங்கள் "இந்தியாவின் நிலைமை இதுதான்" என்று நிர்ணயித்துவிடக் கூடாது.

தாங்கள் சந்திக்கும் நிர்வாக சபை அங்கத்தினர்களும் மற்றப் பிரமுகர்களும் "இந்தியாவில் அமைதி குடி கொண்டிருக்கிறது. அதிருப்தியே கிடையாது" என்பார்கள். "ஜனங்களுக்குச் சர்க்காரிடம் பரிபூரண நம்பிக்கை; ரொம்ப ரொம்ப சிநேகம்" என்பார்கள். "யுத்த முயற்சிகள்

எல்லாம் அபாரமாய் நடக்கின்றன; ஒரு குறைவுமில்லை'' என்பார்கள்.

ஆனல் இதனலெல்லாம் நீர் மோசம் போய்விடக் கூடாது.

இந்தியப் பொதுமக்களின் மனே நிலைமை இன்னதென்பதை வைஸ ராய் நிர்வாக சபை அங்கத்தினர்கள் உமக்குச் சொல்ல மாட்டார்கள்.

பத்திரிகைகளிலும் அதை நீங்கள் காண முடியாது; ஏனெனில் இந்தியப் பத்திரிகைகள் எல்லாம் பிரிட்டிஷ் சர்க்காரின் கட்டுப் பாடுகளுக்கு உட் பட்டே இப்போது நடந்து வரு கின்றன.

ஆகவே, இந்தியாவின் உண்மை நிலைமையை அறிய வேண்டுமானல்,— இந்திய மக்களின் மனதை அறிய வேண்டுமானல் — அதற்கு நீர் வெளி யில் பார்த்துப் பிரயோஜனமில்லை. எங்கள் வேதாந்த சாஸ்திரங்களில் சொல்லியிருப்பது போல் கொஞ்சம் அந்தர் முகமாக நோக்கவேண்டும். நோக்கி உம்மை நீரே ஒரு கேள்வி போட்டுக் கொள்ளவேண்டும். அது என்ன கேள்வி?

'' இந்தியாவைப் பற்றிப் பேச்சு வரும் போதெல்லாம் காந்தி என்றும், ஜவாஹர்லால் நேரு என்றும் கேள்விப் பட்டு வந்தோமே, அவர்கள் இப்போது எங்கே? இந்திய மக்களின் அன்புக்கும் அபிமானத்துக்கும் உரியவர்களா யிருந்த காங்கிரஸ் தலைவர்கள் எல் லாரும் இப்போது எங்கே?'' என்பது தான்.

இந்தக் கேள்விகளில் மூடுமந்திரம் ஒன்றுமில்லை. எல்லோருக்கும் தெரிந்த விஷயந்தான், காந்திஜியும், ஜவா ஹர்லால்ஜியும் பிரிட்டிஷ் சர்க்காரின் சிறைகளில்தான் இருக்கிறர்கள். ஏன்? அவர்களைப் பார்ப்பதற்கு யாராவது அநுமதி கேட்டால் கூட பிரிட்டிஷ் சர்க்கார் கொடுக்க மறுக் கிறர்கள். அது ஏன்?

காந்திஜியும், ஜவாஹர்லால்ஜியும், மற்றக் காங்கிரஸ் தலைவர்களும் சிறையில் இருக்கும் வரையில் இந்தி யாவில் அமைதி குடிகொண்டிருப்ப தாக யாராவது நம்ப முடியுமா? வெளிப்படையாக அமைதி நிலவினு லும், ஜனங்களின் மனதில் அமைதி இருக்குமா? எத்தனை மகாகனம் சாஸ்திரிகள் 'சாந்தி' உபதேசம் செய் தாலும், ஜனங்களின் மனதில் சாந்தி உண்டாகாதுதான்: கொதித்துக் கொண்டு தானிருக்கும். அந்தக் கொதிப்பு எப்போது எந்த ரூத்தில் வெளிப்படுமென்று சொல்ல முடியாது.

இன்னெரு விஷயமும் யோசித்துப் பாரும். இந்த யுத்தம் ஆரம்பிப்ப தற்கு வெகு காலம் முன்னலிருந்து எங்கள் காங்கிரஸ் தலைவர்கள் ருஷியா வுக்கும், சைனவுக்கும் அநுதாபம் செலுத்தி வந்திருக்கிறர்கள். ஜெர் மனி, ஜப்பான் முதலிய சர்வாதிகார நாடுகளின் போக்கைக் கண்டித்து வந்திருக்கிறர்கள். நியாயமாக அப்படிப்பட்ட தலைவர்கள் இன்று என்ன செய்து கொண்டிருக்க வேண் டும்? ருஷியா—சீனவுக்கு உதவியாகவும் அச்சு நாடுகளுக்கு விரோதமாகவும் பெரும் போர் புரிவதற்கு இந்திய மக்களைத் திரட்டிக் கொண்டிருக்க வேண்டும். அவ்வாறு நேசக் கட்சிக்கு மகத்தான பலத்தை அளிக்கக் கூடிய வர்களை, இன்று இந்தியாவை ஆளும் அதிகார வர்க்கம் சிறையில் வைத்திருக் கிறது! இந்த அதிகார வர்க்கத்தார் எவ்வளவு கெட்டிக்காரர்களா யிருக்க வேண்டும்? இவர்கள் இந்தியாவை ஆளத் தகுதியற்றவர்கள் என்பதற்கு வேறு அத்தாட்சி வேண்டுமா?

ஆகவே, இந்தியா ஏன் உடனே சுதந்திரம்பெற வேண்டு மென்பதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் ஏற்படு கின்றன:—

1. சுதந்திரம் ஒவ்வொரு நாட்டுக்கும் பிறப்புரிமை; இந்தியாவுக்கும் அந்த உரிமை உண்டு.

2. இப்போது இந்தியாவை ஆளு வோர் அந்த வேலைக்குக் கொஞ்ச மும் அருகதை யற்றவர்கள்.

இந்த இரண்டு காரணங்களையும் குறிப்பிட்டு '' இந்தியாவுக்கு உடனே சுதந்திரம் கொடுக்கப்பட வேண்டும்'' என்று உங்கள் தலைவர் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்டுக்கு அறிக்கை அனுப்பி னீரானல், உமது கடமையை உண்மை யாகச் செய்தவராவீர்.

நீர் உமது கடமையைச் செய்தாலும் செய்யா விட்டாலும், நாம் நமது கடமையைச் செய்து விட்டோம். அப்புறம் நம்மையும் உம்மையும் படைத்த கடவுள் இருக்கிறர். அவர் உரிய காலத்தில் தமது கடமையைக் கட்டாயம் செய்தே தீருவார் அல்லவா?

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழ்க் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: த. இராமதுரை, அமைச்சர், வாலிபர் வாக்கு வன்மைச் சபை, தருமபுரம் ரோடு, மாயவரம்.

# அக்கப் போர்

"காசி"

பிரபல ஐரிஷ் கவியாகிய ஈட்ஸ் துரைக்கு ஒரு சமயம் அவருடைய அபிமானிகள் ஒரு விருந்தளித்தார்கள். விருந்தின்போது கவிஞர் ஸ்பூனை வாயில் வைத்த வண்ணம் தம்மை மறந்து ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தார். அவர் அப்படி இருப்பதைக் கவனித்தவர்கள் "அடடா! என்ன கவித்துவம்! சாப்பிடும்போது கூடக் கவி கட்டும் ஞாபகந்தான்" என்று வியந்தார்கள். அவர் பக்கத்திலமர்ந்திருந்த பெண்மணி "நாங்கள் இப்போது எதைப்பற்றி யோசனை செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார். "நாளைக்கு ஸ்காட்டிஷ் எக்ஸ்பிரஸ்ஸில் பிரயாணஞ் செய்யப் போகிறேன். அதில் மத்தியானம் டீ கிடைக்குமா, கிடைக்காதா என்று கவலையாயிருக்கிறது" என்று கவிஞர் பளிச்சென்று பதிலளித்தாராம்.

உணவுக் கவலை இப்படிப் பெரிய கவிஞரைக் கூட விடுவதில்லை. நான் இவ்வளவு பீடிகை போட்டுக் கொண்டதற்குக் காரணம் இப்பொழுது உணவைப் பற்றியே அதிகம் சொல்லப் போவதை உத்தேசித்துத்தான்.

* * *

சமீபத்தில் வர்த்தக மெம்பர் கனம் என். ஆர். சர்க்கார் காகிதப் பஞ்சத்தைப்பற்றிப் பேசும்போது "காகிதம் இறக்குமதி செய்யப் போதிய கப்பல்கள் உபயோகிக்க முடியவில்லை. ஏனென்றால் கப்பல்களில் ஆஸ்திரேலியாவிலிருந்து இந்தியாவுக்குக் கோதுமை இறக்குமதி செய்யவேண்டியிருக்கிறது" என்றார். இன்னொரு சர்க்கார் அதிகாரி பேசும்போது "பிரேஸிலில் கொஞ்சம் அரிசி ஸ்டாக் இருக்கிறதாம். அதைத் தருவிக்கக் கப்பல்கள் வேண்டியிருக்கின்றன" என்றார்.

இன்னும் சில வருஷங்கள் போனால் ஐஸ்லாந்திலிருந்து கற்சட்டியும், இட்லியும் தருவிப்பதற்குக் கூடக் கப்பல்கள் வேண்டியிருக்கலாம்!

* * *

பம்பாயில் ரொட்டிக் கிடங்குக்காரர்கள் தங்களுக்குச் சாதாரணமாக மொத்தம் 1000 மூட்டை கோதுமை மாவு தேவையென்றும், ஆனால் 800 மூட்டை கொடுத்தால் எப்படியாவது குறையை சரிப்படுத்தி விடுவதாகவும் கூறினார்களாம். மரத்தின் விலை ஏகப்பட்டதாயிருக்கும் இந்த நாளில் இவர்களுக்கு எப்படி 200 மூட்டை மாத்தான் வாங்கிக் கட்டுபடியாகும் என்று தெரியவில்லை!

* * *

பம்பாயில் சட்டிப் பானைகள் விற்கும் ஒரு கடை வாசலில் ஏ. ஆர். பி. மணல் மூட்டைகளுக்கு நடுவில் 300 மூட்டைகள் கோதுமை தானியம் ஒளித்து வைத்திருந்ததைப் போலீசார் கண்டு பிடித்தார்களாம்.

ஏ. ஆர். பி. ஏற்பாடுகளால் ஒரு பயனுமில்லையென்று விதண்டாவாதம் செய்கிறவர்கள் இப்பொழுது அதன் ஒரு உபயோகத்தையாவது அறிந்து கொண்டிருப்பார்களல்லவா?

ஏ. ஆர். பி. சிப்பந்திகளுக்கு வேலை அதிகமில்லை என்று பரிகசித்துக் கொண்டிருந்தவர்களும் இனிமேல் வாயை மூடிக்கொண்டிருக்க வேண்டியதுதான். ஏனென்றால் இனிமேல் ஏ. ஆர். பி. காரர்கள் தினம் மணல் மூட்டைகளில் அரிசி யிருக்கிறதா என்று குத்திக் குத்திப் பார்க்க வேண்டியிருக்குமல்லவா?

* * *

உணவுப் பொருள்களை 'ரேஷன்' செய்வதற்காக இந்திய சர்க்கார் இங்கிலாந்திலிருந்து ஒரு நிபுணரைத் தருவிக்கப் போகிறார்களாம். அதற்குப் பதிலாகக் "குறைத்துச் சாப்பிடுவதெப்படி?" என்றும் "சாப்பிடாமலே இருப்பது எப்படி?" என்றும் கண்டு பிடிக்கக்கூடிய நிபுணர்களைத் தருவித்தால் உபயோகமாயிருக்கும்.

* * *

சாப்பிடாமலிருப்பதைப் பற்றி எண்ணும்போது புரொபஸர் பன்ஸாலியின் ஞாபகம் வராதிருக்க முடியுமா? அவர் 63 தினங்கள் உண்ணாவிரத மிருந்திருக்கிறார். அதன் பயனாய் இந்திய சர்க்கார் ஆஸ்திரேலியாவிலிருந்து 7435 கோடி கோதுமை மணிகளைக் குறைத்துத் தருவிக்கலாம்!

* * *

துருக்கியப் பத்திரிகைக் கோஷ்டியார் ஐந்து வாரம் சுற்றுப் பிரயாணம் செய்வதற்கு இந்திய சர்க்காரே 'புரோகிராம்' போட்டுக் கொடுத்திருக்கிறார்களாம். ஆனால் அந்தப்

புரோகிராமில் வேண்டிய மாறுதல்களைச் செய்துகொள்ள கோஷ்டியாருக்குச் சர்வ சுதந்திரமும் உண்டாம். உதாரணமாக, டில்லியில் முஸ்லிம் லீக் அங்கத்தினர்களுடன் தேநீர்ப் பானம் சாப்பிடும் அம்சம் சர்க்கார் புரோகிராமிலே கிடையாதாம். ஆனால் கோஷ்டியார் தாங்களே அந்த மாறுதலைச் செய்து கொண்டார்களாம். இந்திய சர்க்கார் ஏற்பாடு செய்யாமலே கோஷ்டியார் தாங்களே தினம் குளிக்கலாம் என்று எண்ணுகிறேன்.

* * *

அமெரிக்கத் தூதரான பிலிப்ஸ் துரை "இதுவரை இந்தியாவுக்கு வந்ததில்லையாம். ஆனால் நாற்பது வருஷ காலம் அமெரிக்க ராஜீய இலாகாவுடன் தொடர்பு கொண்டிருந்ததால் எனக்கு இந்தியாவைப் பற்றித் தெரியும்" என்று கூறுகிறார்.

இதிலிருந்து நமக்கு (1) பிலிப்ஸ் துரைக்கு வயது கட்டாயம் நாற்பதுக்கு மேலிருக்க வேண்டும் என்றும் (2) அமெரிக்க சர்க்காரின் ராஜீய இலாகா இருபத்துநாலு மணி நேரமும் இந்தியாவைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறது என்றும் தெரிய வருகிறது.

* * *

கல்கத்தாவில் சென்ற வெள்ளியன்று இரவு மூன்று ஜப்பானிய விமானங்கள் வந்த போது ஸார்ஜண்ட் பிரிங் என்பவர் தாம் ஒருவராகவே அந்த மூன்றையும் சுட்டு வீழ்த்தினாராம். அந்தச் செய்தியைக் கேட்ட அவர் தாயார் "என் பையன் ஏற்கனவே ஒருதரம் மூன்று விமானங்களைச் சுட்டு வீழ்த்தியிருக்கிறான்" என்றாராம்.

இனிமேல் மூன்று விமானங்கள் வரும் போதெல்லாம் சார்ஜெண்ட் பிரிங்கையே அனுப்புவார்களென்று நம்புகிறேன்.

* * *

மதுரைக்குக் கவர்னர் விஜயஞ்செய்திருந்த போது ஒருவர் 1001 ரூபாய் நாணயங்கள் அடங்கிய ஒரு பையைப் பரிசாக அளித்தாராம்.

இவ்வளவு நாணயங்கள் சேர்த்து வைத்திருந்ததைப் பற்றிப் போலீசார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார்கள்?

* * *

கனம் ஆனே தென்னாட்டுக்கு விஜயஞ் செய்திருந்தபோது ராமேசுவரத்துக்குப் போனார். இந்த மாதம் அவர் பூரி க்ஷேத்திரத்துக்கும் திருப்பதிக்கும் விஜயம் செய்தார். எந்தப் பாவத்தைக் கழிக்க இப்படியெல்லாம் க்ஷேத்திராடனஞ் செய்கிறாரோ தெரியவில்லை.



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

**ச**மீபத்தில் ஒரு சங்கீத வித்வானைச் சந்தித்தேன்.

"என்ன விசேஷம்?" என்று சாதாரணமாய்க் கேட்டேன்.

"ஊரெல்லாம் காலராவும் காபராவுமாய்க் கிடக்கிறது" என்றார்.

"அடடா! அதனால் சங்கீதக் கச்சேரிகளுக்கு விக்கினம் உண்டோ?" என்று கேட்டேன்.

"கச்சேரிகளுக்கு விக்கினம் வந்தால் பாதகமில்லை. தியாகராஜ ஸ்வாமி உற்சவத்துக்கல்லவா விக்கினம் வந்து விட்டது?"

"அப்படியா? திருவையாற்றில் இந்த வருஷம் உற்சவம்.........?"

"நடக்கிறது. ஆனால், வழக்கம்போல் ஐந்து தினங்கள் விமரிசையாக நடக்கவில்லை. ஒருநாள் உற்சவம் நடத்தத்தான் கலெக்டர் அநுமதி கிடைத்தது. ஜனவரி 26உ பகுள பஞ்சமி. அன்று ஆராதனை உற்சவம் சிறப்பாக நடக்கிறது."

"இந்தமட்டும் ஒருநாளாவது நடக்கிறதே!"

"ஆமாம்; இதுகூட நடக்காவிட்டால் வித்வான்களுக்கு மனம் இடிந்து விடும்."

"ஒரு விஷயம் உங்களைக் கேட்கவேணுமென்றிருந்தேன். கர்நாடக சங்கீத உலகில் எத்தனையோ சாஹித்ய கர்த்தாக்கள் இருந்திருக்கிறார்களே? தியாகராஜஸ்வாமிகளிடம் மட்டும் வித்வான்களுக்கு இவ்வளவு பக்தி சிரத்தை ஏன்? அவருடைய ஆராதனை உற்சவத்தில் இவ்வளவு ஊக்கம் ஏன் காட்டுகிறார்கள்?" என்றேன்.

"இது தெரியாதா? தியாகராஜஸ்வாமிகளின் ஸாஹித்யங்களைத்தானே நாங்கள் ரொம்ப அதிகமாகச் சின்னாபின்னப் படுத்துகிறோம்! அதற்குப் பரிகாரமாக வருஷம் ஒரு தடவை திருவையாற்றில் ஸ்வாமிகளின் சமாதிக்கு உற்சவம் நடத்துகிறோம்!" என்று நகைச்சுவையுடன் கூறினார் வித்வான்.

**ஸ்ரீ** தியாகராஜ ஸ்வாமிகள் மகான்; மகா பக்திமான்; சித்த புருஷர். கர்நாடக சங்கீதத்துக்கு ஒப்பற்ற சேவையைச் செய்தவர். நவநவமான மெட்டுக்களில், அபூர்வமான ராக தானங்களில், அற்புதமான ஸாஹித்யங்களைச் செய்திருக்கிறார். அந்த ஸாஹித்யங்களைத் தமிழ்நாட்டு சங்கீத வித்வான்கள் வெகு காலமாகக் கையாண்டு பெயரும் புகழும் அடைந்திருக்கிறார்கள்.

அத்தகைய தியாகராஜ ஸ்வாமிகளிடம் நமது சங்கீத வித்வான்கள் பக்தி கொண்டிருப்பது இயற்கை. வருஷந்தோறும் அவருடைய ஆராதனை உற்சவத்தை நமது சங்கீத வித்வான்கள் அளவிலாத உற்சாகத்துடன் நடத்தி வருகிறார்கள். இந்த வருஷத்தில் காலரா காரணமாகவோ, அல்லது அதிகார அமுல் காரணமாகவோ, ஆராதனை உற்சவம் 26உ ஒரு நாள் மட்டுந்தான் நடைபெறுகிறது என்னும் விஷயம் அநேக வித்வான்களுக்கு மனச் சோர்வை உண்டு பண்ணியிருக்கும். அடுத்த வருஷத்தில் வழக்கம் போல் ஐந்து நாட்கள் சிறப்பாக உற்சவம் நடைபெறுமென்று எதிர்பார்ப்போம்.

## சண்டை என்னத்திற்கு?

**ம**கா கனம் சாஸ்திரியார் சமீபத்தில் "அரசியலில் சாந்தி" என்னும் விஷயத்தைப் பற்றி ஓர் உபந்நியாசம் செய்தார். அதைப் பற்றி நான் இங்கு ஆராய்ச்சி செய்ய வரவில்லை. சாஸ்திரியாரைப்போல் வேறு சிலர் "சங்கீதத்தில் சாந்தி"யைப் பற்றி உபதேசிக்கிறார்களே, அதை இந்தப் பத்தியில் கவனிக்க வேண்டியது அவசியம். "சங்கீதத்தில் சண்டை என்னத்திற்கு?" என்று இந்த சாத்வீக ஆத்மாக்கள் கேட்கிறார்கள். 'சண்டை' என்னும் போது, இவர்கள் தமிழ் இசை இயக்கத்தைத்தான் குறிப்பிடுகிறார்கள். ஆகவே, சண்டையைக் கிளப்பும் பொறுப்பு முழுவதையும் ராஜா ஸர்



இந்த வில்லனுக்கு சங்கீதச் சண்டையை ஆரம்பித்து வைத்தவர் எம். வேங்கடசுப்ப ராவ்.

அண்ணாமலைச் செட்டியார் மேலேயே போட்டு விடுகிறார்கள்! (இந்த வில்லனுக்கு மேற்படி சண்டையைக் கிளப்பியவர் ஸர் வேங்கடசுப்பராவ் என்பதைக் கூட சௌகரியமாக மறந்து விடுகிறார்கள்! இவர்கள் தான் மறக்கிறார்களோ, அல்லது இவர்களுடைய பிரசங்கத்தை வெளியிடும் பத்திரிகைக்காரர்கள்தான் மறைக்கிறார்களோ, தெரியவில்லை.)

“சண்டை”யைக் கிளப்பியது தமிழ் இசை இயக்கம் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் “சண்டை” எது?

“தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டும்” என்று சொல்வது சண்டையா?

இது சண்டையென்றால், இந்தச் சண்டையைத் தமிழர்கள் போட்டுத்தான் ஆக வேண்டும்.

ஆனால், உண்மையில் “தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டும்” என்பது சண்டையில்லை. அதைச் சண்டை என்பதாக எந்த சங்கீத வித்வானும் சொல்லவில்லை.

“தமிழ்ப் பாட்டு பாடக் கூடாது” என்று சிலர் கட்சி கட்டுவதுதான் உண்மையில் சண்டை. அதற்குக் காரணமாக அவர்கள் “தமிழ் சங்கீதத்துக்கு உகந்த பாஷை இல்லை” “தமிழில் நல்ல ஸாஹித்யம் இல்லை” “தமிழ்ப் பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதத்தின் தரம் குறைந்து விடும்” என்றெல்லாம் சொல்லும்போதுதான் சண்டை வலுக்கிறது.

இம்மாதிரியான அவதூறுகளை — தாய் மொழி துவேஷப் பிரசாரத்தை — எந்தத் தமிழன்தான் கேட்டுக் கொண்டு ‘சாந்த’மாயிருக்க முடியும்? அப்படிக் கேட்டுக் கொண்டிருப்பவனைத் “தமிழன்” என்றோ, “தமிழ் பாஷைக் குரியவன்” என்றோ சொல்ல முடியுமா?

மேற்படி “சாந்தி”க் கட்சியைச் சேர்ந்தவர்கள் இன்னொன்று சொல்கிறார்கள். “தமிழ்ப் பாட்டுப் பாடவேண்டியதுதான். வேண்டாமென்று சொல்லவில்லை. அதற்காகத் தியாகராஜர், தீக்ஷிதர் முதலியவர்கள் அளித்திருக்கும் ஸாஹித்யச் செல்வங்களைக் கைவிட்டுவிட முடியாது” என்கிறார்கள்.

தியாகராஜரையும், தீக்ஷிதரையும் தள்ளிவிட வேண்டுமென்று யார் சொல்கிறார்கள்? தமிழிசைக்காரர் யாரும் இதுவரையில் சொல்லவில்லை. பின், இல்லாத அபாயத்தை இவர்கள் ஏன் வருவித்துக் கொண்டு அவஸ்தைப் படுகிறார்கள்?

தமிழிசை இயக்கத்தினால் தியாகராஜருக்கும் தீக்ஷிதருக்கும் ஆபத்து வந்து விடுமா?

ஒரு உதாரணம் பார்க்கலாம்.

நூறு வருஷத்திற்கு முன்னால் ஸ்வாதித் திருநாள் என்ற பெயரையே ரொம்பப் பேர் கேட்டிருக்க மாட்டார்கள். திருவாங்கூர் ஸமஸ்தானத்துக்குத் திடீரென்று சங்கீதப் பிரேமை உண்டாயிற்று. தங்கள் மூதாதையான ஸ்வாதித் திருநாளின் கீர்த்தனங்களைப் பிரபலப்படுத்த வேண்டுமென்று தீர்மானித்தார்கள். தமிழ்நாட்டின் பிரபல சங்கீத வித்வான்கள் பலர் திருவாங்கூர் ஸமஸ்தான வித்வான்கள் ஆனார்கள். தற்சமயம் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனம் பாடாத வித்வான் அருமையென்று சொல்ல வேண்டும். சென்ற 1941-ம் வருஷத்து அகாடமி ப்ரோகிராமைப் பார்த்தால், ஒரு வித்வான் மூன்று ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்கள் பாடியிருக்கிறார் என்பது தெரியவரும்.

இப்படித் திடீரென்று இரண்டு மூன்று வருஷங்களில் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்கள் பிரபலமானபடியால் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி, தீக்ஷிதர் இவர்களுடைய மகிமைக்கு ஏதாவது குறைவு வந்து விட்டதா?



மேற்படியாருக்குச் சரியானபதில் கொடுத்த மழவராயனேந்தல் சுப்பராம பாகவதர்.

ஸ்வாதித் திருநாள் கீர்த்தனைகளினால் தியாகராஜர், தீக்ஷிதர் மகிமை குறைவுபடவில்லையென்றால், தமிழ்க் கீர்த்தனைகளைப் பாடுவதினால் மட்டும் எவ்விதம் குறைவுபடும்?

“சாந்தி” உபதேசக்காரர்களில் சிலர் இன்னும் ஒரு விசித்திர

மான வாதத்தையும் சொல்கிறார்கள். "சங்கீதத்துக்கு பாஷை என்னத்திற்கு? சங்கீதமே ஒரு தனி பாஷை அல்லவா?" என்கிறார்கள். உடனே, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வேணுகானம் செய்தபோது ஆடு, மாடு, மரம், மட்டை, புல், பூண்டு, கல்லு, முள்ளு எல்லாம் கண்ணீர் விட்டுக் கதறியதை எடுத்துக் காட்டுகிறார்கள்.

இந்த வாதத்தைச் சொல்கிறவர்களை, சங்கீதத்தைப் பொறுத்த வரையில், மரம் மட்டைகளோடு சேர்த்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஏனெனில், இவர்கள் சங்கீதத்துக்கு ஸாஹித்யமே வேண்டிய தில்லை யென்கிறார்கள். இவர்களுக்குத் தியாகராஜர், தீக்ஷிதர், ஸ்வாதித் திருநாள், முத்துத் தாண்டவர் ஒருவருமே தேவையில்லை.

ஆனால், நாமெல்லாரும் அத்தகைய பக்குவ நிலையை அடையவில்லை. ஸ்ரீ கிருஷ்ண பகவான் நேரில் வந்து மரம், மட்டையெல்லாம் உருகும்படி புல்லாங்குழல் வாசிக்கிறவரையில், நமக்குச் சங்கீதானந்தத்தைப் பூரணமாய் அநுபவிப்பதற்கு ஸாஹித்யமும் வேண்டித்தான் இருக்கிறது. ஸாஹித்தியத்தின் தேவை ஏற்படும்போது, தமிழ் ஸாஹித்யத்துக்கும் இடம் கொடுங்கள் என்றுதான் சொல்கிறோம்.

உண்மை என்னவென்றால், தமிழ் இசையை எதிர்ப்பவர்கள் முன்னுக்குப் பின் முரணாக எல்லாவிதமான வாதங்களையும் உபயோகப்படுத்துகிறார்கள். எல்லா வாதங்களுக்கும் அடிப்படை தமிழ் மொழியின் மேல் உள்ள பகை அல்லது அலட்சியமாகத்தான் இருக்கும்.

தமிழ் மக்கள் இதை எப்படிச் சகித்துக் கொண்டு "சண்டை வேண்டாம்" என்று சாந்தமாய் இருக்க முடியும்?

## மத்தியானக் கச்சேரிகள்

"மணி"

இவ்வருஷம் மியூஸிக் அகாடமியில் மத்தியான வேளையில் நமது இளம் வித்வான்கள் கச்சேரி செய்தார்களே, அவர்களுக்குக் கனகாபிஷேகம் செய்யவேண்டும். எதிரே கண்ணுக்கெட்டிய தூரம் காலி நாற்காலிகளைப் பார்த்துக்கொண்டு யார்தான் உற்சாகமாகப் பாட முடியும்?—ஆனாலும் நமது இளம் வித்வான்கள் தங்களால் கூடிய வரையில் வஞ்சனையில்லாமல் உற்சாகமாகத்தான் பாடினார்கள்.

26உ சிதம்பரம் ரங்காச்சாரியும், 27உ ஸ்ரீ ராமநாராயணனும், 28உ வேலூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையும் கச்சேரி செய்தார்கள். சிதம்பரம் ரங்காச்சாரியார் உயர்ந்த கர்நாடக சுத்தமான வழியில் உழைத்துப் பாடினார். ஸ்ரீ ராமநாராயணன் குரல் வெகு மதுரமாயிருந்தது. வேலூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் பாட்டில் நல்ல அழுத்தமிருந்தது. ஆனால் சபை கூடியிருந்த இலட்சணம்—இவர்களுடைய கச்சேரிகள் சோபிக்காமலே போயிற்று. முன்னாலெல்லாம் காலி நாற்காலிகளா யிருந்ததோடு, பின்னால் தரையில் உட்கார்ந்திருந்தவர்கள் சள சள வென்று பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு ஏதோ கோட்டைஸ்டாம் கொடுக்க ஆரம்பித்து விடவே ஏக ரகளையாய்ப் போய்விட்டது. போவோர் வருவோர் கலாட்டாவினால் வேறு சத்தம். இந்த இளம் வித்வான்கள் சங்கீத வித்வத் சபையில் கச்சேரிதான் செய்கிறார்களா, அல்லது சாயங்காலக் கச்சேரிக்கு டிக்கட் விற்பதற்குப் "பின்னணி சங்கீதம்" (Background Music) பாடுகிறார்களா என்று சந்தேகிக்கும்படி இருந்தது.

29, 30, 31உ களில் மத்தியானக் கச்சேரிகள் கொஞ்சம் சுமாராயமைந்தன. அதாவது சபையில் அவ்வளவு குழப்பம் இல்லாமல் அமைதி நிலவிற்று.

மாயவரம் ராஜம் சக்கைப் போடு போட்டு விட்டார். சில நாளைக்கு முன் ரஸிக ரஞ்சனி சபையில் இவர் செய்த கச்சேரி அவ்வளவு சுகப்படவில்லையாம். அந்த அபிப்பிராயம் மாறும்படி இன்று வெளுத்து வாங்குகிறார் என்று எனக்குப் பின்னால் சிலர் பேசிக்கொண்டார்கள். மாயவரம் ராஜத்துக்கு நல்ல எடுப்பான சாரீரம். உயர்ந்த சங்கீத பாணி. ஆனால், கார்வை கொடுக்கும்போது "அ"காரத்துக்குப் பதிலாக "எ"காரத்தை உபயோகிக்கிறார். மாற்றிக்கொண்டால் தேவலை.

இளம் பாடகர் கோஷ்டியில் சாத்தூர் சுப்பிரமணியத்துக்குத்தான் முதன்மை ஸ்தானம் கொடுக்க வேண்டுமென்பது அநேகருடைய அபிப்பிராயம். இந்த அபிப்பிராயத்தை உறுதிப் படுத்தும் முறையில்தான் இவர் பாடினார். இவருடைய பாட்டில் சவுக்கம், விறுவிறுப்பு, அழுத்தம், பிர்க்கா எல்லாம் பொருத்தமான அளவில் கலந்திருக்கிறது. சாரீரமும் கம்பீரமா யிருக்கிறது.

பிடில் டி. டி. சங்கரய்யரை இந்த அகாடமி விஸ்வனில் அதிர்ஷ்டசாலி என்று சொல்ல



இளம் ரேடியோ பாடகர் சேலம் தேசிகன்.

லாம். சாயங் காலத்தில் இவர் வாசித்த கச்சேரியில் தான் எல்லா நாளையும் விடக் கூட்டம் அதிகம். அவ்விதமே பிற்பகலில் இவர் பிடில் வாசித்த தஞ்சாவூர் நாணுவின் கச்சேரிக்குத் தான் எல்லா நாளையும் விடக் கூட்டம் அதிகமாயிருந்தது.

(அப்பன்கோவில் லக்ஷ்மிநாராயண பாகவதருக்குக் "கர்நாடக"த்தினால் கொடுக்கப்பட்ட "தஞ்சாவூர் நாணு" என்ற பெயர் ஸ்திரமாக நிலைத்து விட்டது. அவருடைய முழுப் பெயரை யாருமே இப்போது குறிப்பிடக் காணோம்.)

அன்று கூட்டம் அதிகமாயிருந்ததற்குத் தகுந்தாற்போல் கச்சேரியும் முதல்தரமாயமைந்தது. தஞ்சாவூர் நாணுவின் சாரீரத்தில் ஒரு விசேஷ மெருகு இருக்கிறது. காம்போதி ராகத்தை ஒரு வெளு வெளுத்து "சடசட"வென்று அப்ளாஸ் விழும்படி செய்து விட்டார்.

தஞ்சாவூர் நாணுவின் கச்சேரி முடிந்ததும், சபையில் பெரும்பாலோர் அன்று சாயங்காலக் கச்சேரிக்கு இராமல் மளமளவென்று எழுந்திருந்து போனார்கள். "இவ்வளவு நல்ல பாட்டுக்காரருக்கு ஏன் சாயங்காலக் கச்சேரி கொடுக்கவில்லை?" என்பதில் அவர்களுக்கிருந்த கோபத்தைக் காட்டுவதற்காகவே அப்படி அவசரமாக எழுந்திருந்து 'வாக்-அவுட்' செய்ததுபோல் தோன்றியது.

## கேட்டுப் பாருங்கள்!

சென்னை ரேடியோக்காரர்கள் "தமாஷ் சங்கீதம்" என்று ஒரு புதிய திட்டத்தை இந்த 20உ 7-45க்கு ஆரம்பிக்கிறார்கள். அப்புறம் பிரதி புதன்கிழமையும் 7-45க்கு இந்தத் திட்டம் நடக்குமாம். ஆரம்ப தினத்தில் இத் திட்டத்தில் ஸ்ரீமதி வஸுந்தரா கலந்து கொள்ளப் போகிறாராம். "தமாஷ் சங்கீதம்" உண்மையில் எவ்வளவு தமாஷாயிருக்கிறதென்று பார்க்க வேண்டியதுதான்.

ஜனவரி 21உ திருச்சியில் பெரிய பக்க வாத்தியங்களுடன் செம்மை வைத்தியநாத பாகவதரின் கச்சேரி.

22உ திருச்சியில் மைலம் வஜ்ரவேலு முதலியார், முத்துத் தாண்டவர் ஸாஹித்யங்களைப் பாடுகிறார்.

24உ சென்னையில் மன்னார்குடி சாம்பசிவன் பாட்டும், திருச்சியில் மன்னார்குடி சாவித்ரி அம்மாள் கோட்டும் கேட்டுப் பார்க்கத் தகுந்தவை. அன்று ஸ்ரீ எம். ஜி. நாகோஜிராவ் திருச்சியில் தமிழ் மயமாகப் பாடுகிறார். "முருகனுக்கொரு சேடன்" என்னும் முத்தையா பாகவதரின் ஸாஹித்யம் ஆவலைத் தூண்டி விடுகிறது.

25உ திருச்சியில் காரைக்குடி சாம்பசிவய்யர் வீணைக் கச்சேரி.

26உ திருவையாற்றில் நடைபெறும் தியாகராஜ உற்சவக் கச்சேரிகள் அஞ்சல்.

27உ சென்னையில் ஸ்ரீ அங்கப்பப் பிள்ளை நாதஸ்வரமும், திருச்சியில் கே. வி. தியாகராஜன் பாட்டும் நடைபெறுகின்றன.

28உ திருச்சியில் முடிகொண்டான் வெங்கட்ராமையரின் கச்சேரியில் சில புதிய தமிழ் ஸாஹித்யங்கள் காணப்படுகின்றன.

29உ சென்னையில் கோட்வாத்தியமும் வீணையும் சேர்ந்து நடக்கும் கச்சேரி ஒன்று போட்டிருக்கிறது. 8-30க்கு "வாக்கு வாதம்" என்னும் இசை நாடகத்தையும் கேட்க வேண்டும்.

30உ சென்னையில் நூதனூர் கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகளின் கோட்டு வாத்தியம். (இந்த இதழ் மேலட்டையில் தியாகராஜ ஸ்வாமி விமானத்தைத் தாங்குகிறவர்களில் இவரையும் காணலாம்.)



இன்னொரு இளம் ரேடியோ பாடகர் டி. வி. நமசிவாயம்.



மெடிகல் ஆபீஸர்
சொன்னார்
தினம் காலையிலெழுந்ததும்
ஈனோஸ் ப்ரூட் ஸால்ட்
உட்கொள்ளுங்கள்.
டாக்டர்கள் சிபார்சு செய்வது
ஈனோஸ் தான்!

# திண்ணை ரஸாயனம்

— சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் —

## ஐந்தாவது நாள்

சே :—விறகு எரிகிறது. மண்ணெண்ணெய் எரிகிறது. துணிக்கும் தீ வைத்து எரித்து விடலாம். ஆனல் இரும்பு அப்படி எரியுமோ? எரியும். அனல வாயுவுக்கு அதையும் தகித்துவிடும் சக்தி உண்டு.

நீ :—என்ன சொல்லுகிறீர்கள்? இரும்பைக்கூடவா அனலவாயு தகித்துவிடும்?

சே :—துருப் பிடித்துப் போகிறதே இரும்பு, அது அனலத்தின் வேலைதான்.

நீ :—ஓ, அதைச் சொல்லுகிறீர்களா? அது சாதாரணமாச்சே!

சே :—எல்லா விஷயங்களும் அப்படித்தான். தினமும் நடைபெறும் நிகழ்ச்சிகளை ஆராய்ந்தால்தான் ரசாயன உண்மைகள் வெளிப்படும். இரும்பு துருப் பிடிப்பது ஏதோ இரும்பின் பழுது என்று எண்ணுகிறோம். இரும்புச் சாமானுக்கு எண்ணெய் துடைத்து வைத்தால் அனலம் அதை எட்ட இடமில்லாமல் துருப் பிடிப்பதில்லை.

நீ :—இரும்புக்கும் அனலத்துக்கும் இவ்வாறு ரசாயனப் புணர்ச்சி ஏற்பட்டால் ஏன் கொழுந்து விட்டு எரிவதில்லை, விறகு பற்றி எரிகிற மாதிரி?

சே :—விறகு எரியும்போது சேர்ந்தாப் போல் ஒரே அடியாக அதிக வேகத்துடன் தீ கிளம்புகிறது. சாவகாசமாக அனலப் புணர்ச்சி உண்டாகும்போது, வெப்பம் தோன்றத் தோன்றச் சிதறிப் போகிறது. தீ காண்பதில்லை.

நீ:—சூட்சுமமாகப் பார்த்தால் வெப்பம் இருப்பது தெரியும் என்கிறீர்கள்.

சே:—நுட்பமான சோதனைச் சாதனங்கள் வைத்துப் பார்த்தால் எந்த ரசாயனப் புணர்ச்சியிலும் ஓரளவு வெப்பம் தோன்றுவதைக் காணலாம். முன்காலத்திலெல்லாம் அக்கினியானது பொருள்களில் எல்லாம் அந்தரங்கமாக மூடிக் கிடப்பதாகவும், தீப்பற்றி எரியும்போது அந்த அக்கினி வெளியே வருவதாகவும் பண்டிதர்கள் எண்ணி வந்தார்கள்.

நீ :—அப்படியேதான் சுருதியும் சொல்லுகிறது.

சே :—புணர்ச்சி வேகம் பொருள்களில் மறைந்து கிடக்கிறது. புணர்ச்சி உண்டானல் அது வெப்பமாக அவதரிக்கிறது. ஒரு பொருள் எரியும்போது, வெளியிலிருக்கும் வாயு இந்த நிகழ்ச்சியில் சேர்ந்து நடத்துவதை அவர்கள் சரியாகக் காணவில்லை.

நீ :—அப்படியில்லை சாஸ்திரிகளே! சுருதியில் வாயுவானது அக்கினி பகவானுக்குச் சகா என்று சொல்லப்பட்டிருக்கிறது. வாயு ஸகா என்றே அக்கினிக்குப் பெயர்.

சே :—நம்ம பெரியவாளுக்குத் தெரியாத தொன்றுமில்லை. ஆயினும் பொருள்களின் தகனத்தைப் பற்றி ஐயம் திரிபு அறச் சோதித்து விஷயத்தைக் கண்ட பின்தான் அனல வாயுவின் தன்மைகள் சரியாகத் தெரிந்தது. அனலப் புணர்ச்சியே தகனம். அனலித்தல் என்பது விறகைப்போல் தீப்பற்றி எரிவதும், வெப்பம் காணுமல் இரும்பு துருப் பிடிக்கிற மாதிரி அனலம் கூடுவதும். எந்த விதமாகவாவது அனலப் புணர்ச்சி ஏற்படுவதற்கும் பொதுப் பெயர்.

வெங்கடராமன் :—இதை ஆக்ஸிடேஷன் என்று சொன்னல்தான் என்ன? அனலித்தல் என்பதில் என்ன சவுகரியம்? ஆக்ஸைட் என்பதற்கு என்ன சொல்லுவீர்கள்?

நீலகண்ட :—என்ன சொல்லுகிறுன் வெங்கடராமன்? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே.

சே :—ஒன்றுமில்லை. இது பழைய விவாதம். ஆங்கிலத்தில் ஆக்ஸைட் என்ருல் அனலம் புணர்ந்த பொருள் என்று அர்த்தம். இரும்பு ஆக்ஸைட் என்ருல் இரும்புடன் அனலம் புணர்ந்த சிந்தூரம். இதற்குத் தமிழில் என்ன சொல்லுவீர்கள் என்று கேட்கிறுன்.

நீ :—நீங்கள்தான் சொன்னீர்களே சிந்தூரம் என்று.

சே :—அது ஒரு சரியான பெயர்தான். ஆனல் அனலம் சேர்ந்த பொருள் என்று

வியக்தமாகத் தெரியுமாறு ஒரு மொழி வேண்டும். அனலதை என்றால் அது வியக்தமாகும். அனலம் சேர்ந்த பொருள் திரவமாகவுமிருக்கலாம், வாயுவாகவு மிருக்கலாம், சிந்தூரமாகவுமிருக்கலாம். அனலித்தல் என்றால் அனலம் புணரும் நிகழ்ச்சி. ரஜம் அனலித்தால் ரஜ அனலதையாகும்; கரி அனலித்தால் கரி யனலதையாகும். ஒரு கரி அணுவும் இரண்டு அனல அணுக்களும் சேர்ந்து கரி யீரனலதை ஆகும்.

* * *

நீ:—அதென்ன? கரி யீரனலதை?

சே:—கரியமிலவாயு என்று நாம் சுவாசத்தில் மலமாகக் கழிக்கும் வாயு, தேகத்திலுள்ள கரிப்பொருளும் சுவாசிக்கிற அனலமும் புணர்ந்து வெளிப்படுகிறது. கரிப்பொருள் தேகத்தில் எரிந்து கரியனலதை ஆகிறது. அது ஒரு வாயு. அதுவே கரியீரனலதை. ஒரு கரியணுவுக்கு இரண்டு அனல வாயு அணு புணர்ந்திருப்பதால் கரி—ஈர்—அனலதை.

நீ:—கரியீரனலதை என்பது நாம் சுவாசம் விடும் வாயுவுக்குப் பெயர் என்கிறீர்கள்.

சே:—விளக்கு அல்லது விறகு எரிந்தாலும் கரியீரனலதை உண்டாகிறது.

நீ:—விளக்கும் ஒரு பிராணன் போலவே என்கிறீர்கள்.

சே:—சுவாசிக்கும் ஒவ்வொரு பிராணியும் இவ்வாறு கரியீரனலதை உண்டாக்கி வருகிறது. எண்ணெய் எரிந்தாலும் இவ்வாறே கரியீரனலதை உண்டாகிறது. உடலிலுள்ள கரிப்பொருள் எரிந்தே கரியீரனலதை உண்டாகிறது. அது சுவாசத்தின் வழியாக வெளிப்படுகிறது.

நீ:—அனல வாயுவே உயிருக்கு ஆதாரம் என்கிறீர்கள்.

சே:—அதற்கென்ன சந்தேகம்? சகல ஜீவகோடிகளையும் அனலம்தான் தாங்கி வருகிறது.

* *

நீ:—மரம் நம்மைப்போல் மூச்சுவிடக் காணுமே.

சே:—விடுகிறது தீக்ஷிதர்வாளே, நன்றாக விடுகிறது.

நீ:—என்ன சொல்கிறீர்கள்? காற்றில் இலை ஆடுகிறதே அதைச் சொல்லுகிறீர்களா?

சே:—இல்லை, இலைகளிலுள்ள அணுத்துவாரங்களின் வழியாகச் செடி மூச்சு எடுக்கிறது, மூச்சு விடுகிறது, இரண்டும் செய்கிறது. இலையைப் பிய்த்துவிட்டால் செடி மூச்சுத் திணறிக் கஷ்டப்படும். ஆனால் அதன் ஜீவ சக்தியினால் மறுபடியும் இலை உண்டாகும். சக்தி குறைந்திருந்தால் சில சமயம் செத்தும் போகும்.

நீ:—செடிகளும் மரங்களும் சுவாசிக்கிறது என்றால் நம்மைப்போல் அவைகளுக்குச் சுவாசப் பை உண்டோ?

சே:—நல்ல கேள்வி போடுகிறீர்களே! தாவரங்கள் காற்றிலுள்ள கரியீரனலதையை எடுத்துக்கொண்டு அதனிலுள்ள கரிப் பொருளைத் தம் யாக்கைப் பொருளாகச் செய்து கொள்ளும். அனலத்தைப் பிரித்து விடும். அனலம் வெளியேறும்.

நீ:—விவரமாகச் சொல்லுங்கள். கொஞ்சம் கலவரமாக இருக்கிறது. தாவரங்களும் நம்மைப்போல் அனலவாயுவைத்தானே உட்கொள்ளுகிறது.

சே:—இல்லை. பிராணிகள் மலமாகக் கழித்து விடும் கரியீரனலதையானது காற்றில் கலந்திருக்கிறது. அது தாவரங்களுக்கு உணவாகிறது. காற்றிலுள்ள கரியீரனலதையை அவை பிரயோஜனப்படுத்திக் கொள்ளுகின்றன. தாவரங்கள் கரியீரனலதையிலுள்ள கரிப் பொருளை உட்கொண்டு அனலத்தைப் பிரித்துத் தள்ளி விடுகின்றன.

நீ:—அதாவது தாவரங்கள் கரியமில வாயுவை உணவாகக் கொண்டு ஜீவிக்கின்றன. 'சுவாசிக்கின்றன' என்பது உபசாரம்.

சே:—ஆமாம், அவ்வாறே வைத்துக் கொள்ளலாம். காற்றை உணவாகக் கொள்ளுகின்றன. அதாவது காற்றி

## அதை யார் கேட்டது!



"ஏண்டா, நீ நல்ல சமையற்காரன் தானே?"

"ஆமாமாம். வெள்ளிக்கிழமை தவறாமல் கோவிலுக்குப் போவேன், ஸார்!"

ளுள்ள கரியிரனஸைத்தையைத் தாவ ரங்கள் உட்கொண்டு ஜீவிக்கின்றன.

நீ :—அப்படியானல் மரத்திற்கு வேர் என்னத்திற்கு ?

சே :—வேர் வழியாகச் சிலவித உண வும் இலைகள் வழியாகச் சில உணவும் தாவரங்கள் அடைகின்றன. நாமும் அவ்வாறே வாய் வழியாக வயிற்றின் மூலம் ஒரு பங்கு உணவு அடைகிறோம். சுவாசத்தின் வழியாக ஒரு பங்கு நமக்கு வேண்டிய பொருளை அடைகிறோம். எல்லாம் உணவேதான். மூச்சும் உணவே.

நீ:—ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. பகவானுடைய சிருஷ்டியை என்ன வென்றுதான் சொல்லுகிறது !

* * *

சே :—தாவரங்களைப் பற்றி விசாரித் துக்கொண்டே போனல் அது ஒரு பெரிய கடல்போல் வளரும். அது ரசா யனத்தில் சேர்ந்த விஷயமல்ல. அது தாவர சாஸ்திரம். தீயைப் பற்றியும் அனலத்தைப் பற்றியும் ஒரு ஆங்கில ரசாயனர் ஒரு பிரான்ஸ் ரசாயனர் இரு வரும் தனித்தனியாக சோதித்துத் தத்து வங்களை நன்ருக எடுத்துக் காட்டினர் கள். பூர்வீகர்கள் ஆரம்பித்த ரசாயன சாஸ்திரத்தைத் தற்காலத்தில் இந்த இருவரே அதிகமாக விருத்தி செய்தவர் கள். பிரான்ஸ் குடியரசு குழப்பத்தில் அவர்களில் ஒருவர் மரண தண்டனை அடைந்தார். மற்றொருவரும் ஆங்கிலேய நாட்டில் நடந்த ஒரு அரசியல் குழப் பத்தில் வீடும் சொத்தும் கொளுத் தப்பட்டு நஷ்ட மடைந்தார்.

நீ :—அனல தேவனுடைய ரகசியங் களில் புகுந்ததற்கு தண்டனை.

சே :—இருக்கலாம்.

நீ :—சிருஷ்டி ரகசியங்களை நாம் பிரித்துப் பிரித்துச் சோதித்தல் தெய் வத்திற்குப் பிடிக்காது போலிருக்கிறது. இன்று இத்தோடு நிறுத்தலாம்.

சே :—அப்படியே.

நீ :—செல்வியைப் பற்றி ஆத்தில் என்ன அபிப்பிராயம் ?

சே :—எல்லாம் ரொம்ப சம்மதமாகத் தானிருக்கிறது. அடுத்த சித்திரையில் முடித்து விடலாம் போலிருக்கிறது. மச்சினர் ஊரில்லை. அவர் வரட்டும்.

நீ :—சுபம் ! சுபம் !! போய் வரு கிறேன்.

சே :—நமோ நம : (இன்னும் வரும்)

# கர்வ பங்கம்

ஆசிரியர் : சரத் சந்திர சட்டர்ஜி] [மொழிபெயர்ப்பு : ஆர். ஷண்முகசுந்தரம்

## அத்தியாயம் 5.

இரண்டு மூன்று நாளைக்கப்புறம் பேச்சு வாக்கில் இந்து மிகக் கோபமடைந்து, "உண்மையைக் கேட்டுக் கோபமடையாதிருந்தால் சொல்கிறேன், மன்னி! கலியாணம் ஆகாமல் இருந்திருந்தாலும் உன் அண்ணாவுக்குப் பரவாயில்லை. ஆனால் அம்பிகா பாபுக்கு அப்படி அல்ல" என்றான்.

விமலா, "ஏன்?" என்று கேட்டாள்.

"ஏனென்றால் குடும்பத்தை நடத்தச் சக்தி இல்லாவிட்டால் அது மகா பெரிய பாவம்!"

இதைக் கேட்டு விமலா மிகுந்த வருத்தமடைந்தாள். இந்துவை அவள் ரொம்பவும் நேசித்து வந்தாளாகையால் இந்துவின் வார்த்தைகள் அவள் மனதைப் பெரிதும் புண்படுத்தின.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு. "அம்பிகா பாபு செய்தது தவறாயிருக்கலாம். ஆனால், அவருடைய மனைவி தன் கடமையைச் செய்யாதிருப்பதா? அவள் இறக்கும் வரையிலும் பதிக்கு சேவை செய்துதானே ஆக வேண்டும்?" என்றாள் விமலா.

"ஏன் செய்தாக வேண்டும்? அவர்கள் அக்ரமம் செய்வார்கள். அதிகாரத்துக்கு அப்பாற் பட்டதையும் செய்வார்கள். ஆனால், அதன் பலனை அனுபவிப்பது நாம்தானா? நீ இங்கிலீஷ் படித்ததில்லை. மற்ற சமூகங்களைப் பற்றியும் உனக்கு ஒன்றும் தெரியாது. நான் ஒன்று உனக்குச் சொல்கிறேன், கேள். கடமை என்பது ஒரு சாராருக்கு மட்டும் ஏற்பட்டதன்று. இரு சாராருக்கும் உண்டு. இல்லாவிட்டால் ஒன்றும் முடியாது. ஆண்கள் இதை நமக்குத் தெரியவிடுவதில்லை. அவர்கள் ஏன் நமக்குத் தெரிவிப்பதில்லை தெரியுமா? நாம் அம்பிகா பாபுவின் மனைவியைப்போல, உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு சேவை செய்வதால்தான்!"

விமலா கண நேரம் அசைவற்றிருந்தாள். "இருக்கட்டும், நாம் ஏன் அப்படிச் செய்யக்கூடாது? சேவை செய்வதென்பது ஸ்திரீகளுக்குப் பெரிய கடினமான காரியம் என்று நீ நினைக்கிறாயா? அம்பிகா பாபுவின் மனைவி வெளிக்குத்தான் மெலிந்தவள்போல் உனக்குத் தோன்றுகிறாள். ஆனால் உள்ளுக்குள் அவள் அடையும் ஆனந்தத்தை உன்னால் அறிந்து கொள்ள முடியுமா?"

"நான் அறிய விரும்பவில்லை."

"கணவனுடைய அன்பைக் கூட ஒரு வேளை தெரிந்துகொள்ள ஆசைப்படமாட்டாயாக்கும்?"

"இல்லை, விமலா. பிரியமில்லை. ஆனால் அன்பைக் குறைத்துக் கொண்டு தன் கடமையை அவர் செய்தால் க்ஷேமந்தான்."

விமலா நின்று கொண்டிருந்தாள். பொங்கி வரும் பெருமூச்சை அடக்கிக் கொண்டே அவள் உட்கார்ந்தாள்.

"இதே வார்த்தையை இதற்கு முன்பும் ஒரு தடவை சொல்லி இருக்கிறாய். ஆனால் என் அண்ணா கடமையிலிருந்து எள்ளளவாவது தவறி விட்டார் என்பது அப்பொழுதும் தெரியவில்லை, இப்பொழுதும் தெரியவில்லை. அந்தக் கடமை என்ன என்பது உனக்குத் தெரிந்திருக்கலாம். எத்தனையோ புஸ்தகங்களைப் படித்திருக்கிறாய். எத்தனையோ தேசங்களைப் பற்றி அறிந்திருக்கிறாய். உன்னோடு தர்க்கம் செய்வது எனக்கு அழகல்ல. இருந்தாலும், கணவன் என்ன செய்தாலும் அவனுடைய அன்பை அலட்சியம் செய்கிற மனமுகம் எந்த தேசத்துப் பெண்களுக்கும் கிடையாது. அந்த வஸ்துவை இழந்த பிறகு அப்புறம் செத்துப்போவதே மேல் என்று எனக்குப் படுகிறது. அந்த அன்பை இழந்த பிறகும் வாழ்வது வெறுங் கேலிக் கூத்தாகும்."

"இதை நான் ஒருகாலும் ஒப்புக் கொள்வதில்லை."

"அவசியம் ஒப்புக்கொள்ள வேணும்" என்று சொல்லி, விமலா சிரித்தாள். இவ்வளவு தூரம் அவள் சொன்னதுகூட விளையாட்டுக்குத்தான் என்று தோன்றும்படி அபிநயம் செய்தாள். வாஸ்த

வத்தில் பெண்கள் இப்படிப் பேசிக் கொள்வது, விளையாட்டைத் தவிர வேறு என்ன?

"மன்னி, நான் சொல்லி விடுகிறேன். கண்டபடி என்னிடம் கதை அளக்கிறாய். ஆனால் அண்ணாவிடம் நீ கற்ற வித்தையைக் காட்டி விடாதே. ஏனென்றால் அவர்கள் ஆண்கள் பார்! எத்தனை பெரிய புத்திமானாயிருந்தாலும் அடிக்கடி......" என்று சொல்லி நிறுத்தினாள் விமலா.

"அடிக்கடி என்ன?" என்றாள் இந்து.

"வேடிக்கை அவர்களுக்குப் புரிவதில்லை" என்றாள் விமலா.

"இது அவர்களைப் பொறுத்தது. இதற்காக நான் கவலை கொள்வதில்லை."

"என்னால் என்னவோ யோசிக்காமல் இருக்க முடிவதில்லை, மன்னி."

இந்துமதி சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, "ஏனோ?" என்றாள்.

விமலா சற்று யோசித்து விட்டு, "கோபித்துக் கொள்ளாதே மன்னி. அண்ணா நோயுற்றிருக்கும் போது உன்னைக் காணாமல் எங்கே அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ என்று எனக்குப் பயமாயிருந்தது. கஷ்டப்படாமல் சுகம் கிடைக்குமா? இப்பொழுது ஒரு வேளை அந்த எண்ணம் இல்லாமலிருக்கலாம்."

திடீரென இந்துவின் முகம் கறுத்தது. அதன் பிறகு சிரமத்துடன் சிரித்துக் கொண்டு, "உனக்குக் கோடி நமஸ்காரம் விமலா! உன் அண்ணாவிடம் சொல்லு. நான் இவைகளையெல்லாம் துளிக்கூடப் பொருட் படுத்துவதில்லை. நல்லது கெட்டது என்னவானாலும் சரி, நானேதான் சமாளித்துக் கொள்ளுவேன். அதற்காக மற்றவர்களுக்குக் கஷ்டத்தைத் தர நான் முன் வர மாட்டேன். இதை நீ நன்றாகத் தெரிந்து கொள்" என்றாள்.

**வீ**ட்டிற்கு வந்ததும் கணவனுடைய அறைக்குள் நுழைந்து, "நான் மிதுனப்பூர் சென்றதற்கப்புறம் நீங்கள் நோயுற்றிருந்தீர்களா?" என்றாள்.

நரேந்திரன் சற்றுத் தலையை உயர்த்தி, "இல்லை, நோய் ஒன்றுமில்லை, வலிதான் கொஞ்சம் உண்டாயிற்று" என்றான்.

"செலவு ஏற்பட்டுவிடுமென்றுதானே தங்கையின் வீட்டுக்குப் போய் விட்டீர்கள்?"

மனைவியின் இக் கடூரமான பேச்சைக் கேட்டு நரேந்திரன் மௌனமானான். கொஞ்ச நேரம் கழித்து மெதுவாக "விமலா வந்து கூட்டிக் கொண்டு போனாள்" என்றான்.

"அனாதைகளுக்காகவேதான் ஆஸ்பத்திரிகள் கட்டி வைத்திருக்கிறார்கள் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். பிறத்தியாருக்குச் சுமையாக இல்லாமல் அங்கே போய் இருந்திருக்கலாமே?"

நரேந்திரன் ஒன்றுமே பேசவில்லை. இந்து உடனே அறையை விட்டு வெளியே சென்று விட்டாள். அவள் சென்ற வேகத்தில் ஒரு கண்ணாடி கிளாஸ்கூட கால் தடுக்கி உடைந்து விட்டது. அவள் அதைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

ஐந்து நிமிஷத்துக்குப் பிறகு மறுபடியும் அறைக்குள் நுழைந்து, "மன்னி



"......இந்தாருங்கள், உங்கள் 'பீஸ்' நோகை......"

எனக்குத் தகவல் கொடுக்க விரும்பினுளே, நீங்கள் ஏன் தடுத்தீர்கள்? ஒருவேளை மருந்துடன் பாஷாணத்தையும் கொடுத்து விடுவேன் என்று நினைத்துக் கொண்டீர்களா?" என்ருள்.

நரேந்திரன் தலையை உயர்த்தி, "இல்லை, அப்படி நினைக்கவில்லை. உனக்கும் உடம்பு சரியில்லை......"

"நன்ருகத்தான் இருந்தேன். தகவல் தெரிந்திருந்தால்கூட வந்திருக்க மாட்டேன். இது நிச்சயம். நானும் அங்கு ஜுரத்தால் இறக்கப் போகிறேனென்று உங்களுக்குக் கடிதத்தில் ஒன்றும் எழுதவில்லை. வீணுகப் பொய் வார்த்தைகளைக் கூறி மன்னியையும் கடிதம் எழுதுவதைத் தடுத்துவிட்டீர்கள்" என்று சொல்லிவிட்டு, அவள் வந்ததுபோலவே வேகமாகச் சென்றுவிட்டாள்.

நரேந்திரன் முன்போலவே புத்தகத்தை விரித்துப் பிடித்துக் கொண்டான். ஆனல், ஒரு எழுத்தாவது அவன் கண்ணில் படவில்லை!

* * *

இந்துமதி கதவோரத்தில் நின்று கொண்டு டாக்டரிடம். "நீங்கள்தானே ககன பாபு வீட்டில் என் கணவருக்கு வைத்தியம் பார்த்தீர்கள்" என்ருள்.

அந்த வயோதிக டாக்டர் இந்துவை ஒருதரம் பார்த்துவிட்டு, "ஆம்" என்று ஒப்புக் கொண்டார்.

"ஆனல் அவர் இன்னும் பூரண குணம் அடையவில்லை போலிருக்கிறது. இந்தாருங்கள், உங்கள் 'பீஸ்' தொகை. இன்றைக்கு ஒரு தடவை சிநேக முறையில் அவரை வந்து பார்த்தால், பெருத்த உபகாரம் செய்தவராவீர்கள்" என்ருள்.

டாக்டர் கொஞ்சம் திடுக்கிட்டுப் போனர். அவள் அதை அறிந்து கொண்டாள். "அவருடைய ஸ்வபாவமே அப்படித்தான். சிகிச்சை செய்து கொள்ளமாட்டார்" என்ருள்.

டாக்டரும் அதை ஒப்புக்கொண்டார்.

* * *

"அம்மா, வல்லபப் பத்தர் வந்திருக்கிருர்" என்று ராமன் வந்து சொன்னன்.

"வந்துவிட்டாரா? கூட்டி வா" என்ருள் இந்து.

"ஓ, வல்லபா! கொஞ்சம் வேலை இருக்கிறது. நமக்கு ரொம்பவும் நம்பிக்கையுள்ள ஆசாமி, இந்த மோதிரங்களை நீ விற்றுக் கொடுக்க வேண்டும். பழைய காலத்து மோதிரமப்பா இது! இப்போது இதைப் போட்டுக் கொள்வதில்லை. இந்தப் பணத்தில் வேறு ஒன்று புதிதாக வாங்க வேண்டுமென்று எண்ணி இருக்கிறேன்."

"அப்படியே ஆகட்டும், அம்மா. விற்றுத் தருகிறேன்."

"தராசு கொண்டு வந்திருக்கிருயா? எவ்வளவு இருக்குமென்று கண்ணுல் பார்த்தாலே தெரியாதா? பணம் எனக்கு நாளைக்கே வேண்டும். தாமதம் ஆகக்கூடாது."

"சரி, நாளைக்கே கொடுத்துவிடுகிறேன்."

வல்லபன் மோதிரத்தைக் கையில் வாங்கிக்கொண்டு, "இது ரொம்பப் புதுமையாயிருக்கிறதே! விற்பதற்குச் சற்று சிரமப் படவேண்டும்" என்ருன்.

"அது போகிறது. இது எனக்குப் பிடிக்கவில்லை. இதைக் கேளப்பா. பாபுஜியிடம் இதைப் பற்றிச் சொல்லக் கூடாது."

பாபுஜிகளுக்குத் தெரியாமல் நகைகளை விற்பது வல்லபனுக்குத் தெரியாத விஷயம் அல்ல! அவன் மெதுவாகச் சிரித்துக்கொண்டே மோதிரத்தை வாங்கிக்கொண்டு சென்ருன்.

(தொடரும்)

---

# நல்ல மருந்து




"ஸார்! நீங்கள் கொடுத்த மருந்து இருமலைச் சீக்கிரம் குணப்படுத்துமா?"

"ஓ! பேஷா! ரொம்ப ஸ்டிராங் மிக்சர் ஸார். இரண்டே வேளையிலே குணப்படுத்திவிடும். நானே அதை ஒரு மாசமாச் சாப்பிட்டுண்டு வரேன்."

ACII-7

# தித்திப்பு

கு.ப.ராஜகோபாலன்

"என்னைச் சுத்த மடிசஞ்சியாக்கி விட்டாயே, உன் சாமர்த்தியமல்லவா சாமர்த்தியம்! மணி பன்னிரண்டாகிறது. காலையில் சாப்பிட்ட ஒரு வாய்க் காப்பியுடன் என்னை உட்கார வைத்திருக்கிறாயே!"

"பண்டிகை பருவம் என்றால் அன்று ஒரு நாளாவது நியம நிஷ்டையுடன் இருக்க வேண்டாமா? தினம் தான் நம் இஷ்டம்போல் இருக்கிறோம்!"

"பண்டிகை பருவம், நியமம் நிஷ்டை—உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட பிறகுதான் இந்த வார்த்தைகளை என் காதில் படுகின்றன."

"அந்த நாட்களிலேதான் தித்திப்பு—இன்று பொங்கல் — கரும்பு!"

"தித்திப்பு பொங்கலிலும் கரும்பிலும் தானா என்ன?"

"பின் வேறு எதில்?"

"வாழ்க்கையில் — நீ இருக்கும் வாழ்க்கையில்."

"போங்கள், இதுதான் உங்களுக்கு வேலை!" என்று ராதை பெருமையுடன் புன்னகை செய்தாள்.

"வேறென்ன வேலை? உன்னைப் பார்த்த நாளேதான் என் வேறு வேலையெல்லாம் காற்றில் போய் விட்டதே!"

"என்ன வேலை?"

"நான் செய்வதாக இருந்த வேலை. ஆனால் ஒன்று, ராதா! இந்தப் பண்டிகை பருவம் வந்தால் —"

"வந்தால் என்ன?"

"வந்தால் அன்று நீ வெகு ஜோராக இருக்கிறாய்!" என்று சொல்லிக் கொண்டே பாலகிருஷ்ணன் மனைவி முகத்தைப் பார்த்துப் பசியையும் மறந்தான்.

"ஆச்சு, வாத்தியார் வருகிற சமயம் தான். அவருக்கும், பாவம், நாலு இடத்தில் வேலை இருக்காதா? எனக்கும் அடுப்பண்டை அரை மணி வேலை இருக்கிறது."

பாலகிருஷ்ணன் பேசவில்லை.

"ரொம்பப் பசிக்கிறதா? இன்னும் கொஞ்சம் காப்பி வேண்டுமானால் போட்டுக் கொடுக்கட்டுமா?" என்று ராதை இளகிக் கேட்டாள்.

"வேண்டாம், பாதகமில்லை" என்று பாலகிருஷ்ணன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே வாத்தியார் ஓட்டமும் நடையுமாக உள்ளே வந்தார்.

"ஐயர்வாள், பூஜைக்கு எல்லாம் தயாராக இருக்கிறதா, உட்காருங்கள்!" என்று சொல்லிக்கொண்டு அவர் முற்றத்தில் வெயிலில் கோலம் போட்டு வைத்திருந்த இடத்திற்குப் பக்கத்தில் உட்கார்ந்தார்.

ராதை பூஜை சாமான்கள் நிறைந்த தட்டையும் வெள்ளிப் பஞ்ச பாத்திர உத்தரணியையும் கொண்டு வந்து வைத்தாள். கரும்பைக் கொண்டு வந்து ஒரு புறம் வைத்தாள்.

பாலகிருஷ்ணன் பலகையில் உட்கார்ந்து வாத்தியார் சொன்னதை யெல்லாம் இயந்திரம் போலச் செய்தான். அவன் நினைவு மட்டும் ராதை தன்னை அடிமைப்படுத்தின வகையை நாடிச் சென்றது.

"அஸ்மாகம்னு சொல்றது, சகுடும்பானாம்—"

* * *

பாலகிருஷ்ணன் காலேஜில் புரட்சிக் கவி. பட்டணத்தில் ஹாஸ்டலில் படித்துக் கொண்டிருந்தான். மற்றெல்லா காலேஜ் மாணவர்களைப்போல அவனும் 'கம்யூனிஸ்ட்' — பொதுவுடைமை வாதி. அதற்கடையாளமாக, நீண்ட மல் சராய், மல் ஜிப்பா — ஸ்லிப்பர்கள் — மற்றபடி கிராப், கண்ணாடி, பாழும் நெற்றி — அவற்றைச் சொல்ல வேண்டியதில்லை.

பி. ஏ. பரீட்சை முடிந்ததும் புரட்சி வேலை செய்வதற்காகப் பாட்டனார் இருந்த கிராமத்திற்குப் புறப்பட்டான். அங்கே "ஜெபான்"களிடையே பொதுவுடைமையைப் பிரசாரம் செய்யப் போவதாக "கம்யூனிஸ்ட்" நண்பர்களிடம் திட்டம் போட்டுக் கொண்டு வந்தான்.

முதல் முதலாக அப்பொழுதுதான் அவன் கிராமத்தையே பார்த்தது.

பட்டணத்தில் பிறந்து வளர்ந்தவன். ஆகையால் கிராமம் என்பது என்ன என்பதே அவனுக்குத் தெரியாது. அதன் இயல்பும் இருப்பும் அவனுக்குத் தெரியாது. போனதுதான் தாமதம், உடனே புரட்சித் தியை அங்கே மூட்டி விடலாம் என்று துடித்துக்கொண்டு வந்தான்.

வந்தநாளே குடியானத் தெருப் பக்கம் போனான். அதுவரையில் பார்த்திராத மனிதன் வந்ததும் குழந்தைகள் பரட்டைத் தலையும் கந்தல் ஆடையுமாக வந்து அவனைச் சுற்றிக் கொண்டனர். நாய்கள் குலைக்க ஆரம்பித்தன. பெண்கள் குடிசைகளை விட்டு வெளியே வந்து நின்றுகொண்டு "பெரியய்யா பேரனா நீ! இதென்ன வேசம்?" என்றார்கள். குடியானவர்கள் ஓரிருவரிடம் அவன் பொதுவுடைமையைப் பற்றிப் பேச ஆரம்பித்தான்.

"நீ இன்னைக்கி வந்து ஏதாச்சியும் சொல்லிப்புட்டு நாளைக்கிப் பட்டணம் பூடுவே. நாங்க இங்கே நிலைச்சுப் பயிர்த் தொளில் செய்யவாணும்? நீ சொல்றதெல்லாம் நடக்காது, சாமி!" என்றார்கள்.

உத்ஸாகம் குன்றி வியர்த்து விறுவிறுத்து பாலகிருஷ்ணன் ஒட்டுகிற வெயிலில் வீடு வந்து சேர்ந்தான்.

"ஏண்டாப்பா, இத்தனை நாழி எங்கே போயிருந்தே?" என்று ரேழித் திண்ணையில் உட்கார்ந்திருந்த பாட்டனார் கேட்டார்.

"இது சுத்த முட்டாள் ஊராயிருக்கே, தாத்தா!" என்றான் பாலகிருஷ்ணன்.

"கிராம மெல்லாம் அப்படித்தான் இருக்கும். இங்கே படிப்பேது? சரி, போய் ஸ்னானம் செய்து விட்டுச் சாப்பிடு!"

* * *

["சாயாதேவி ஸமேத சூர்யநாராயண ஸ்வாமினே தூபம் தரிசயாமி! அந்த சாம்பிராணியை எடுத்துக் காட்டறது!" என்று வாத்தியார் சொன்னார்.]

* * *

சாப்பிட்டு விட்டுப் பாலகிருஷ்ணன் சராயும் சட்டையுமாக வாசல் திண்ணையில் வந்து உட்கார்ந்தான்.

"தாத்தா, படிக்க ஏதாவது புத்தகம் இருக்கிறதா?" என்று கேட்டான்.

"என்ன புஸ்தகம் வேணுமப்பா?"

"ஏதாவது அரசியல், பொருளாதாரம்—"

"என்னிடம் கிரந்த புஸ்தகங்கள் இருக்கு. தமிழில் தாயுமானவர், பட்டினத்தார், ராமலிங்க ஸ்வாமிகள் பாடல்களும் தேவாரம் திருவாசகமும் இருக்கு!"

"வேண்டாம்!" என்று சொல்லி முகத்தைச் சுளித்துக்கொண்டு அவன் தெருவைப் பார்க்கலானான்.

மாடுகள் மேய்ச்சலுக்குப் போய்க் கொண்டிருந்தன. பின்னால் மாட்டுக்காரன் அடிக்கடி "இந்தா, இந்தா!" என்று கத்தி முன் போன மாடுகளைச் சரியான வழியோடு போகும்படி செய்து கொண்டே வந்தான். சாணி பொறுக்கும் சிறுமி ஒருத்தி சாணித் தட்டுடன் வந்தாள். வயலைச் சுற்றிக் கொண்டு வீடு திரும்பும் ரெட்டியார். வழியில் ஆற்றில் குளித்து விட்டு வேஷ்டியைக் காற்றில் காய விட்டுக் கொண்டே போனார். தோட்டி பொங்கியன் கிராம முனிசிபு விட்டு வாசலுக்கெதிரில் வேப்பமரத்து நிழலில் கம்பளியைக் கீழே போட்டுக்கொண்டு கையும் கம்புமாக உட்கார்ந்திருந்தான்.

"இந்த ஊரில் இவர்களுக்கெல்லாம் எப்படிப் பொழுது போகிறது?" என்று பாலகிருஷ்ணன் ஆச்சரியப்பட்டான்.

ஆற்றில் குளித்து விட்டு சரப் புடைவையுடன் இடுப்பில் குடத்தை வைத்துக்கொண்டு வந்த பெண் ஒருத்தி அவனைப் பார்த்தவள், அவன் தன்னைப் பார்க்கிறான் என்று அறிந்தவுடன் வேகமாக நடந்து எதிர்வீட்டுக்குள் நுழைந்தாள்.

அந்த மாதிரி பெண்ணை அவன் பட்டணத்தில் பார்த்ததில்லை. வயது பதின்மூன்று பதினாலு தானிருக்கும். தளதளவென்று காட்டுக் கொடிபோல இருந்தாள். குடத்தை எடுத்துக்கொண்டு தாட், தாட் என்று நடந்து போனாள். தலையில் கட்டு மயிர்; முகத்தில் சொட்டும் அழகு. பட்டணத்துப் பெண்கள் எல்லாம் தொட்டியில் வளரும் ரத்தம் செத்த வளர்ப்புக் கொடிகள்போல அவன் மனதில் பட்டார்கள் அப்பொழுது.

கிராமத்தில் கூட இந்த மாதிரி ஒரு கவர்ச்சி இருக்கிறதா என்று அவனுக்கு அது ஒரு புதுமை போலத் தோன்றிற்று. அந்த மாதிரி ஒரு கிராமத்திற்கு ஒரு பெண் இருந்தால் கிராமாந்திரம் பாதகமில்லை என்று எண்ணினான். அரைகுறையாக அவன் பார்த்த அந்த ஒரு பார்வை—அதில் என்ன இருந்தது என்று அவனுக்குப் புரியவில்லை; ஆனால் அவன் கண் எதிர்வீட்டை விட்டு அகலவில்லை.

இந்தப் பெண் கம்யூனிஸ்டாக இருப்பாளா? கம்யூனிஸத்தில் பெண்கள் —சை — என்ன கம்யூனிஸம் எப்பப் பார்த்தாலும்!"

அந்தப் பெண்ணின் பார்வை முன்பே கம்யூனிஸத்திற்கு இந்தக் கதி!

"அப்பா! உள்ளே போய் வேணும்னு செத்தே படுத்துக்கோயேன்!"

கிழவரும் ஒரு காலத்தில் பையனாக இருந்தவர்தானே?

"ஏண்டாப்பா, எதுராளாத்துலே ஒரு குட்டி இருக்கா—" என்று அவர் ஆரம்பித்தவுடன் பாலகிருஷ்ணனுக்குத் தூக்கி வாரிப் போட்டு விட்டது.

"நல்ல குலம் கோத்திரம். இந்த வருஷம் அவா பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணியாகணும்னு தவிக்கறா. சரியான வரன் கிடைக்கல்லே. பிராமணன் நல்ல ஸத்து. தாயியும் அப்படித்தான் குட்டியும் பொருகுடிகை. நாம் வேணுமானா கட்டிப் போட்டு வைப்பமா? உங்கப்பாவுக்கு எழுதியிருக்கேன்."

"இல்லே, தாத்தா, நான் —"

"சரிதாண்டா, சொன்னேன்!" என்று விட்டு விட்டார் கிழவர்.

சற்று நேரம் கழித்து எதிர் வீட்டிலிருந்து ஒரு மின்னல் புறப்பட்டு அவனைத் தாண்டிக்கொண்டு உள்ளே போயிற்று.

ரேழியில் பொடி உறிஞ்சிக் கொண்டிருந்த கிழவர் "ராதே, எங்க பாலகிருஷ்ணனைக் கலியாணம் பண்ணிக்கறயா?" என்றார்.

"போங்கோ தாத்தா!" என்ற குரல் பாலகிருஷ்ணன் காதில் விழுந்து உள்ளத்தில் பாய்ந்து அவனை என்னென்னவோ செய்து விட்டது.

இன்னும் சற்றுக் கழித்து தாயி வந்தாள்.

"எப்போ வந்தே அப்பா?" என்று பாலகிருஷ்ணனைக் கேட்டுக் கொண்டே ரேழிக்குப் போனாள்.

"நேத்திக்கி வந்தேன்—அம்மாமி!" என்று பாலகிருஷ்ணன் சொன்னான்.

"வா, தாயி, ஒம்பொண்ணே எங்க பாலகிருஷ்ணனுக்குக் கொடுத்துடேன்!" என்று ரேழியில் கிழவர் மறித்துக் கொண்டார்.

"பேஷாச் செஞ்சுக்கோங்களேன்? யாரைக் கேக்கணும்" என்று புன்னகையுடன் சொல்லிக்கொண்டே அந்தம்மாள் உள்ளே போனாள்.

["நைவேத்யானந்தரம் ஆசமனீயம் சமர்ப்பயாமி — தட்டிலே ஜலம் விடறது — இல்லே, ஸ்வாமி மேலே இல்லே, கீழே விடுங்கோ!" என்றார் வாத்தியார்.]

* * *

பாலகிருஷ்ணனுக்குத் திடீரென்று தாகம் எடுத்து விட்டது. உள்ளே போனான். அங்கே கூடத்தில் உட்கார்ந்திருந்த ராதை சடக்கென்று எழுந்திருந்து சமையலறைக்குள் போய் விட்டாள்.

"பாட்டி, தீர்த்தம் வேணும்!"

"அடி பொண்ணே, அதோ சின்னக் குடத்திலே விழுப்பு ஜலமிருக்கு, அந்த வெங்கல டம்ளரில் கொண்டு வா!" என்றாள் பாட்டி.

குடத்துச் சத்தம், டம்ளர் சத்தம், ஜலம் விழும் சத்தம் எல்லாம் இப்பொழுது பாலகிருஷ்ணன் காதுக்கு இன்னிசையாக விருந்தன. ராதை, புதுப் புடைவை ஒவ்வொரு அடியிலும்



ஜவான் போல் நின்றுகொண்டிருந்த இடத்தில்......

தடுக்க, டம்ளரைப் பாட்டியிடம் கொண்டு வந்து வைத்தாள்.

"நானு தீர்த்தம் கேட்டேன்? அப்படி வையேண்டி! பொண்ணைப் பார்க்க வாண்டாமோ?"

ராதை மெது நடை நடந்து டம்ளரை பாலகிருஷ்ணன் ஜவான் போல நின்ற இடத்தில் கொண்டு வந்து வைத்து விட்டுத் திரும்பி உள்ளே போனாள்.

"அப்பா, உக்காந்து சாப்பிடு!" என்றாள் கிழவி. சராயுடன் அவன் எப்படித் தரையில் உட்காருவான் என்று அவனுக்குத் தெரியவில்லை. நின்றபடியே ஒரு வாய் ஜலத்தைக் குடித்தான். புரை ஏறிவிட்டது. கதவருகிலிருந்து மெல்லிய சிரிப்பொலி ஒன்று கேட்டது.

"யார் நினைக்கக்கரா? உங்கப்பாவுக்குத்தான் கடிதாக போட்டிருக்கு."

"என்ன போட்டிருக்கிறது பாட்டி?"

"முகூர்த்தம் எப்ப வச்சுக்கறது, லீவு எப்பக் கிடைக்கும்னுதான்."

அதற்கு மேல் அவனுக்குத் தீர்த்தம் வேண்டியிருக்கவில்லை. அமிருத பானம் பண்ணினது போல ஆகிவிட்டது.

டம்ளரைக் கீழே வைத்து விட்டுச் சிறிது தயங்கினான். வாசலுக்குப் போய்த்தான் ஆகவேண்டும். போனான். ரேழியில் கிழவரைக் காணோம். பாலகிருஷ்ணன் வாசலில் பாரா கொடுத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

முதலில் தாயி வெளியே வந்தாள். மரியாதையாகத் தலைகுனிந்து கொண்டு வீட்டுக்குப் போனாள். இரண்டு தடைகள் நீங்கி விட்டன என்று பாலகிருஷ்ணன் கணக்குப் போட்டுக் கொண்டான். பாட்டி உள்ளேதான் இருப்பாள். ராதை அவனைத் தாண்டிக் கொண்டுதானே வீட்டுக்குப் போக வேண்டும்?

ராதையும் பொல்லாத பெண். ஓசைப் படாமல் ரேழி வரையில் வந்து விட்டாள். வாசலில்தான் அவன் காதைத் தீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தானே?

நெருக்கடி ரேழியில் ஏற்பட்டு விட்டது.

"ஏன் சிரித்தாய்?"

"வழி விடுங்கோ, யாராவது வருவார்கள்!"

"வரட்டும் சொல்லு!"

"வெறுமனேதான்!"

"சொன்னுத்தான்!"

"சராயைப் பார்த்துச் சிரிப்பு வந்தது!" என்று சொல்லிவிட்டு ராதை மறுபடியும் சிரித்தாள்.

பிறகு பாலகிருஷ்ணனுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுமா?

"ஐயையோ, யாராவது—" என்று ஆனந்தத்தில் முணுமுணுத்தாள் ராதை.

பாலகிருஷ்ணன் விடாக்கொண்டனாகி விட்டான்.

"விடுங்களேன்" என்றாள் ராதை.

தெருவில் கிழவர் இருமலைக் கேட்டு பாலகிருஷ்ணன் பிடியைத் தளர்த்தினான். ராதை ஓடியே போய்விட்டாள்.

பாலகிருஷ்ணன் உள்ளேபோய்ச் சராயைக் கழற்றி எறிந்து விட்டு வேஷ்டி உடுத்திக் கொண்டான்.

"ஏண்டா, சராய் எங்கே?" என்றாள் பாட்டி.

"கஷ்டமாக இருக்கிறது பாட்டி!"

அன்றே ஆரம்பித்து விட்டது ராதையின் ஆட்சி!

* * *

"சூரியநாராயண ஸ்வருபஸ்ய பிராம்மணஸ்ய இதமாஸனம்—"

ராதை அவன் கையில் தாம்பூலத்தை எடுத்துக் கொடுத்தாள். ஒரு கையால் அதை அவன் வாத்தியாரிடம் நீட்டினான்.

"இரண்டுகைகளாலும் கொடுங்கோ!"

கொடுத்து விட்டுத் திரும்பினான் பாலகிருஷ்ணன்.

"வாத்தியாருக்கு நமஸ்காரம் பண்ணுங்கோ!" என்று ராதை தானும் கூட நமஸ்காரம் செய்தாள்.

"சீக்கிரமேவ சுப சந்தானப் பிராப்திரஸ்து!" என்று வாத்தியார் ஆசீர்வாதம் செய்தார்.

வாத்தியார் வெற்றிலைபாக்கு வகையறாக்களை முடிந்துகொண்டு மறுபடியும் ஓட்டத்தை ஆரம்பித்தார்.

"இலை போட்டாச்சு, வாங்கோ!"

பாலகிருஷ்ணன் இலையில் உட்கார்ந்தான்.

"சாதம் வச்சதும் நித்யம்போல ஆபோசனம் வாங்கிக்கப் படாது. நெய் அபிகாரம் செய்து விட்டு ஆபோசனம் போடுகிறேன்!" என்று ராதா சீக்கிரமாகப் பரிமாறி ஆபோசனம் போட்டாள்.

"பொங்கலை முதலில் சாப்பிடுங்கோ! நன்னாருக்கா? பால் நன்னாப் பொங்கித்து!"

"நன்னாப் பொங்கினால்?" என்று பாலகிருஷ்ணன் கேட்டான்.

"நன்னாப் பொங்கினால் நல்லது!" என்று ராதை புன்னகையுடன் சொல்லி விட்டுக் கரும்பை நறுக்க ஆரம்பித்தாள்.

"சாப்பிட்டதும் கரும்பு தின்னாட்டு வெற்றிலை போட்டுக் கொள்ளுங்கள்!"

"ஏன்?"

"ஏன்னா, சாஸ்திரம்!"

"இதெல்லாம் சாஸ்திரத்தில் எழுதி வைத்திருக்கிறதோ?"

"எழுதி வைத்தால் தான் சாஸ்திரமா என்ன? நல்லதெல்லாம் சாஸ்திரம்!"

"உன்னுடைய சாஸ்திரமாக்கும். அதன்படி நான் நடக்கவேண்டும்?"

"நடக்க வேண்டாமா? பின் எதற்காகக் கலியாணம் செய்து கொண்டீர்கள்?"

"உனக்குத் தோப்புக்கரணம் போடவா?" என்று பாலகிருஷ்ணன் சிரித்துக்கொண்டே இலையை விட்டு எழுந்திருந்தான்.

"மோர் விட்டுக்கல்லியா?"

"வயிறு நிரம்பிவிட்டது. பொங்கல் நிறையப் போட்டுவிட்டாய்! நீ சாப்பிட உட்கார்.'

"நான்தான் சொன்னேனே. சாதமே செல்லவில்லை. வாயிலெடுக்க வருகிறது. கொஞ்சம் பொங்கல் சாப்பிட்டு விட்டேன்."

"என்ன உடம்பு உனக்கு?"

"உடம்பா, சொல்லுகிறேன், நாளைக்கு ஊருக்குக் கடுதாசி எழுதலாம்."

பாலகிருஷ்ணன் சிறிது நேரம் அப்படியே நின்றான். பிறகு சட்டென்று அவளிடம் போய் "ராது, ராது, நான் சுத்த முட்டாள்! ஒண்டியாக நீ இவ்வளவு காரியம் செய்கிறாயே!" என்று பதறினான்.

ராதா சிரித்துக்கொண்டு "அடுத்த வருஷம் ஒரு கரும்பு போராது, இரண்டு வேணும்!" என்று ஒரு கரும்புத் துண்டை அவன் வாயில் போட்டாள்.

"ராதா, என்ன தித்திப்பு!"

"எது?"

"இந்தக் கரும்பு—நீ—உன் பேச்சு—உன் உத்தரவு!"




அந்தக் கேள்விக்குச் சரியான பதில் இதோ!



டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகளை தவறாமல் வாங்குவதால்



அதனால் போரிலீடுபடும் இந்திய யுவர்களுக்கு வேண்டிய உடை, ஆயுத உபகரணங்களை அளிக்க நீங்கள் உதவி புரிகிறீர்கள்



யுத்தத்தில் அவர்களுக்கு பக்கபலமளிக்கும் டாங்கிகள், ஆகாய விமானங்கள், துப்பாக்கிகள் வாங்கவும் உதவுகிறீர்கள்



மேலும், இந்தியக் கைத்தொழில்கள் விருத்தியடைவதற்கும் உதவி செய்கிறீர்கள்

யுத்தம் முடிந்தவுடன்...



வெற்றியுடன் திரும்பும் உங்கள் பிள்ளைகளை வரவேற்கும்போது அவர்கள் வெற்றி பெற நீங்களும் உதவி செய்தீர்கள் என்று சந்தோஷமடைவீர்கள். அன்றியும் அமைதி காலத்தில் அவர்களுக்கு உதவக்கூடிய உங்கள் முதலீடும் மேல் மேலும் பெருகுவதைக் கண்டு களிப்பீர்கள். எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் முதலிடுகிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு அதிக லாபம் —இப்பொழுதே செய்யுங்கள்!

## டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகளை வாங்குங்கள்

- ★ இந்திய கவர்ன்மெண்டாரால் உத்தரவாதமளிக்கப்பட்டது
- ★ எப்பொழுது வேண்டுமானாலும் பணமாக மாற்றிக்கொள்ளலாம்
- ★ ஒவ்வொரு ரூ. 10-க்கும் ரூ. 3-0- லாபம்

T. 2775

# மனக் குரங்கு

[ வி. ஜி. ]

செங்கற்பட்டு ஜில்லாவிலேயே காவலூர் கல்லமுத்துப் பிள்ளையைப் பற்றி அறியாதவர் ஒருவரும் இருக்க முடியாது. அவருடைய தெய்வ பக்தியும் ராஜ பக்தியும் பிரசித்தமானவை. தினசரி அவர் வீட்டுத் திண்ணையில் பேர்கக் கச்சேரி ஓயாமல் நடந்துகொண்டிருக்கும். பேச்சென்றால் எல்லாம் யுத்தத்தைப் பற்றிய பேச்சுத்தான். பிரஞ்சு சரணாகதியடைந்தது என்றாலும் சரி, ஹாலந்து அதோகதி யடைந்தது என்றாலும் சரி, அவர் என்னமோ இங்கிலீஷ்காரன்தான் கடைசியில் ஜயிப்பான் என்பார். ஹிட்லர் - முஸோலினியோடு டோஜோவையும் சேர்த்துக் கட்டி வெளுத்து வாங்கிவிடுவார். சர்ச்சிலின் காரியங்களைப் பற்றி யாராவது ஏதாவது குறைவாகச் சொன்னால் அவருக்குப் பொல்லாத கோபம் வந்துவிடும். அவருக்குக் கோபம் வருவதற்காக வேணுமென்றே சிலர் சர்ச்சிலின் காரியங்களைப் பற்றிக் குறை கூறுவார்கள்.

அவரது வாழ்க்கையில் அவர் சஞ்சலப்படக் கூடிய விஷயம் ஒன்றே ஒன்று இருந்தது. அது அவருடைய அருமைப் புதல்வி வேதாவைப் பற்றியதுதான்.

எனக்கு ஒரு நாள் அவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தைப் படித்ததும், எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஏனெனில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பரம பக்தரான அவர், அந்தக் கடிதத்தில், "புண்ணியவான் ஹிட்லர் சிரஞ்சீவியாயிருக்க வேண்டும்! அவனால்தான் எனது சஞ்சலம் தீர்ந்தது; என் அருமை வேதா மீண்டும் தன் கணவனை அடைவதும் சாத்தியமாயிற்று!" என்று குறிப்பிட்டிருந்தார்.

## 2

லக்ஷ்மி கடாட்சம் பூரணமாகப் பொருந்தியிருந்த பிள்ளைவாளுக்குப் பிள்ளையில்லாத குறை பெரிய குறையாயிருந்தது. அதற்காக அவர் திருக்கழுக்குன்றத்து வேதகிரீசுவரரைத் தியானம் செய்ய ஆரம்பித்தார். அதன் பலனாகத்தான் குழந்தை வேதா பிறந்தாள் என்பது அவருடைய நம்பிக்கை.

தாய் தந்தையற்ற அநாதையான தமது தங்கையின் மகன் விருத்தாசலத்திற்கு வேதாவைக் கன்னிகாதானமாகக் கல்யாணம் செய்து கொடுத்துத் தம் வீட்டிலேயே அவர்களை வைத்துக்கொண்டார்.

வேதாவின் நடத்தை விநோதமாயிருந்தது. பெற்றோர் கொடுத்து வளர்த்த செல்லத்தின் காரணமாகவோ என்னவோ, அவள் கல்யாணமான பிறகும் கூடப் பச்சைக் குழந்தை மாதிரியே நடந்து கொண்டாள். விருத்தாசலத்தைக் கண்டால் அவளுக்கு ஒரு மனுஷனாகவே தோன்றவில்லை. அவள் தனக்குத்தானே ஆடிக் கொள்வாள்; பாடிக் கொள்வாள்; சிரித்துக் கொள்வாள். ஏதாவது பேசவதாயிருந்தால் அம்மாவுடன் போய்ப் பேசுவாள்; அப்பாவுடன் போய்ப் பேசுவாள். விருத்தாசலத்துடன் மட்டும் ஏனோ அவள் எந்தவிதமான சம்பந்தமும் வைத்துக் கொள்வதில்லை.

சில சமயம் வேதா வீட்டிலுள்ள பூனைக் குட்டியைத் தூக்கித் தன் மடியின் மீது வைத்துக்கொண்டு, அதனுடன் கொஞ்சி விளையாடிக் கொண்டிருப்பாள். அந்த சமயத்தில் விருத்தாசலம், "வேதா, வேதா! இங்கே வாயேன்!" என்று அன்பு ததும்ப அழைப்பான். உடனே வேதா பூனைக் குட்டியைத் தூக்கி எறிந்து விட்டு, "அம்மா! இங்கே பாரேன்!" என்று சொல்லிக் கொண்டே அம்மாவிடம் ஓடி விடுவாள். விருத்தாசலம் ஆடு திருடிய கள்ளன் மாதிரி திருதிருவென்று விழித்துக் கொண்டே வெளியே போய்விடுவான்.

இதன் காரணமாகவோ என்னவோ ஒரு நாள் திடீரென்று விருத்தாசலம் காணாமற் போய்விட்டான். அவன் அப்படிப் போன ஒரு மாதத்திற்குப் பிறகு, அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில், தான் பர்மாவில் இருப்பதாகவும், தன்னை உடனே அழைத்துக்கொண்டு போக யாரும் வந்துவிட வேண்டாமென்றும், தானே இன்னும் இரண்டு மாதத்திற்கெல்லாம் வந்துவிடுவதாகவும் அவன் எழுதியிருந்தான்.

அவன் காணாமற் போனதைப் பற்றி வருந்திக் கொண்டிருந்த கல்லமுத்துப் பிள்ளை தம்பதிகள், அந்தக் கடிதத்தைக் கண்டதும் சிறிது ஆறுதலடைந்தார்கள். 'அவனைப் பார்க்க வேண்டும்' என்ற ஒருவிதமான ஆவல் வேதாவின் உள்ளத்திலும் புகுந்து வேலை செய்யத் தொடங்கியது. அவள் சீக்கிரம்

திரும்பி வரவேண்டு மென்பதற்காக, அவன் தினசரி மாலை வேளையில் ஈசுவரன் கோவிலுக்குச் சென்று விளக்கேற்றி வைத்து விட்டு வந்தான் !

மேற்சொன்ன கடிதம் வந்த ஒரு மாதத்திற்கெல்லாம் பர்மாவிலிருந்து ஒரு தந்தி வந்தது. அந்தத் தந்தியை யாரோ பாராங்குசம் என்பவன் அடித்திருந்தான். "டைபாயிட் ஜுரத்தினால் விருத்தாசலம் இறந்து போனான்" என்று அந்தத் தந்தியில் கண்டிருந்தது.

வேதாவின் வீட்டில் துக்கம் குடி கொண்டது.

* * *

இவ்வளவு தூரம் தெரிந்த எனக்கு, அந்தச் செத்துப் போன விருத்தாசலம் மீண்டும் பிழைத்து வந்தான் என்று தெரிந்ததும், அவன் பிழைத்து வந்த விதத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் அதிகமாயிற்று. மேலும் அதற்குக் காரணம் அந்தப் புண்ணியவான் அடால்ப்-ஹிட்லர் என்றதும், அதன் மர்மத்தை அறிய எனக்குப் பெரிதும் பரபரப்பு ஏற்பட்டது. எனவே, நான் காவலூருக்குப் பிரயாணமானேன்.

## 3

அன்று பிற்பகல், விருந்திற்குப் பிறகு நான் விருத்தாசலத்தை அழைத்துக்கொண்டு குளத்தங்கரை ஆலமரத்தடிக்குப் போனேன். "செத்துப் போன நீ இப்பொழுது எப்படியப்பா பிழைத்து வந்தாய்?" என்று கேட்டேன். அவன் சொன்னான் :

"கல்யாணம் பண்ணியும் சந்நியாசியாக இருக்க எனக்கு விருப்பமில்லை. எனவே, பர்மாவில் வசித்து வந்த எனது பள்ளிக் கூடத்து நண்பனான பாராங்குசத்திற்குக் கடிதம் எழுதினேன். அவனும் என்னை வரச் சொன்னான். அங்கு சென்றதும், 'ரங்கூன் கெஜட்' என்னும் பத்திரிகாலயத்தில் எனக்கொரு குமாஸ்தா வேலை பார்த்து வைத்தான். அந்தப் பத்திரிகாலயத்தில் மியா - மே என்னும் பெயர் கொண்ட ஒரு பர்மிய அழகி 'டைப்பிஸ்ட்'டாக வேலை பார்த்து வந்தாள். அவளைக் கலியாணம் செய்துகொண்டு பர்மாவிலேயே தங்கி விடுவதென்று தீர்மானித்திருந்தேன். என்றாலும், வேதா விட்டாலும் அவளுடைய அப்பா நம்மை விட மாட்டார் என்ற அச்சம் மட்டும் எனக்கு ஒரு பக்கம் இருக்கத்தான் செய்தது. அதனால்தான் நான் இறந்து விட்டதாக எனது நண்பனிடம் சொல்லி, ஊருக்கு ஒரு தந்தி அடிக்கச் சொல்லிவிட்டேன். சமீபத்தில் ஜப்பான்குள்ளர்கள் பர்மாவைத் தாக்கினார்களல்லவா? அப்பொழுது எனது நண்பன் பாராங்குசம் பர்மாவை விட்டு வெளியேற வேண்டுமென்று என்னிடம் சொன்னபோது, நான் மியா - மேயையும் என்னுடன் வரும்படி அழைத்தேன். 'நானாவது, எனது சொந்த நாட்டை விட்டு உன்னுடன் வருகிறதாவது!' என்று மறுத்து விட்டாள் மியா - மே. அவளுக்கும் எனக்கும் இருந்த வேற்றுமை அப்பொழுதுதான் எனக்குத் தெரிந்தது. என்ன இருந்தாலும் அவள் பர்மாக்காரி; நான் வேற்று மனுஷன்தானே! இங்கு வந்த பிறகு, நான் கண்ட அதிசயத்தை என்னவென்று சொல்ல? வேதா பழைய வேதா அல்ல என்பதைத் தெரிந்துகொண்டதும், எனது உள்ளத்தில் மகிழ்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அந்தத் தனிமைதான் மனித சுபாவத்தை எவ்வளவு தூரம் மாற்றி விடுகிறது!......"

"சரி, இதற்குத்தான் யுத்தத்தை ஆரம்பித்து வைத்த ஹிட்லரைச் சிரஞ்சீவியாயிருக்க வேண்டுமென்று உனது மாமா வாழ்த்தினார் போலிருக்கிறது!" என்றேன் நான்.

"ஆம்" என்றான் அவன்.

"அவரது வாக்குப் பலிக்காமல் போகட்டும்!" என்று சபித்துவிட்டு, அன்றே நான் சென்னைக்குப் பிரயாணமானேன்.

---

## கவிச் சித்திர விளக்கம்

கோசலநாட்டுப் பெண்கள் நடந்து செல்லும்போது நாணம், உல்லாசம், சாகசம் முதலான எத்தனையோ சாயல்கள் வெளியாகின்றன. அந்தச் சாயல்களின் அழகில் ஈடுபட்டு இளைஞர்களின் சிந்தைகள் அப் பெண்களைப் பின் தொடர்கின்றன. அவ்விதமே, அப் பெண்களின் நடையில் தோன்றும் சாயல்களைத் தாங்களும் பயின்று கொள்ளலாம் என்னும் ஆசையுடன் மயில்களும் அவர்களைப் பின் தொடர்ந்து செல்கின்றன.

[இடங்கொள் சாயல் = வரம்பில்லாத பலவகைச் சாயல்கள் ; தடம் = தடாகம் ; மஞ்ஞை = மயில்.]



இடங்கொள் சாயல்கண்டு
　　இளைஞர் சிந்தைபோல்
நடங்கொள் சோலைவாய்
　　மலர்கொய் நார்குழல்
வடங்கொள் பூண்முலை
　　மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன
　　தோகை மஞ்ஞையே!

கவிச் சித்திரம்—5

—கம்பர்.

# பாப்பா மலர்

## காட்சிச்சாலை விஜயம்

ஜிம்மியும் ஜில்லியும் காற்று வாங்கிக் கொண்டே தெருவில் வந்து கொண்டிருந்தன. அப்பொழுது தூரத்தில் பாண்டு வாத்திய கோஷம் கேட்டது. "ஜில்லி! ஜில்லி! அதோ பார்!" என்று சுட்டிக் காண்பித்தது ஜிம்மி. ஜில்லி திரும்பிப் பார்த்தது. என்ன அதிசயம்! தூரத்தில் ஒரு காம்பவுண்டு வாசலில் சில மிருகங்கள் வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தன. அங்கே தோரணங்கள் எல்லாம் கட்டியிருந்தன. வாசலில் ஏகக் கூட்டம்.

"ஜிம்மி! ஓடிவா! அங்கே என்ன வேடிக்கையென்று பார்ப்போம்" என்றது ஜில்லி. இரண்டுமாகக் கூட்டம் கூடியிருந்த இடத்துக்கு ஓடின. காம்பவுண்டு வாசலில் "மிருகக் காட்சி சாலை" என்று பெரிய போர்டு தொங்கிக் கொண்டிருந்தது. "ஆஹா!" என்று ஜிம்மி ஒரு குதி குதித்தது. "ஜிம்மி! வாயேன்! உள்ளே போய் வேடிக்கை பார்க்கலாம்" என்று கூப்பிட்டது ஜில்லி.

"உள்ளேயா? அதோ பார் அங்கே!" என்று வாசலில் டிக்கட் வாங்குமிடத்தைக் காண்பித்தது ஜிம்மி. "பிரவேசக் கட்டணம் நாலு அணா" என்று அங்கே எழுதியிருந்ததைப் பார்த்துவிட்டு ஜில்லிக்குத் திகிரென்றது. "ஐயோ! நாம்



சுவருக்கு அப்பால் கழுத்தை நீட்டிற்று

நாலு அணாவுக்கு எங்கே போகிறது?" என்று அது ஏங்கிற்று. "அதுதான் எனக்கும் தெரியவில்லை" என்று வருத்தத்துடன் ஜிம்மியும் சொல்லிற்று.

சில மிருகங்கள் வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தன



ஜிம்மியும் ஜில்லியும் உள்ளே போக முடியாமல் பரிதாபமாகக் காம்பவுண்டுச் சுவரைச் சுற்றிச் சுற்றி வந்தன.

"ஜிம்மி! இந்தக் காம்பவுண்டு சுவரைத் தாண்டி-

இருவருக்கும் தெரியாமல் உள்ளே குதித்து விடலாமா?" என்றது ஜில்லி. "ஊஹூம்! நம்மால் இதைத் தாண்ட முடியாது!" என்றது ஜிம்மி.



மாமாவுடன் காட்சிச் சாலைக்குள் நுழைந்தன

இந்த சமயத்தில் ஜிம்மி சட்டென்று எதையோ பார்த்துவிட்டு "ஜில்லி! ஜில்லி!" என்று கூப்பிட்டது. "அதோ அந்த ஒட்டைச் சிவிங்கியைப் பார்த்தாயா?" என்றது ஜிம்மி. "ஆமாம், எத்தனை நீளம் கழுத்து!" என்று சொல்லி விட்டு ஜில்லி சிரித்தது. "இங்கே பார்! நான் ஒரு தந்திரம் செய்கிறேன்" என்றது ஜிம்மி. "என்ன செய்யப் போகிறாய்?" என்று ஜில்லி கேட்பதற்குள், ஜிம்மி தான் கையில் கொண்டு வந்திருந்த வாழைப் பழங்களைக் காட்டி, "இங்கே பார், ஜில்லி! இந்த வாழைப் பழங்களை ஒட்டைச் சிவிங்கிக்குக் காட்டிவிட்டுக் கீழே வைக்கப் போகிறேன். அது கழுத்தைக் காம்பவுண்டுக்கு இப்புறம் நீட்டிப் பழத்தைத் தின்னும்போது, நாம் அதன் கழுத்தில் ஏறிக்கொள்ள வேண்டும். அது கழுத்தை பழையபடி சுருக்கிக் கொள்ளும்போது நாம் 'தொப்'பென்று அந்தப் பக்கம் குதித்து விடலாம்" என்றது ஜிம்மி. "பலே பேஷ்! சரியான யோசனை!" என்று கத்திற்று ஜில்லி.

ஜிம்மி 'வள்' 'வள்'ளென்று குலைக்கவே, ஒட்டைச் சிவிங்கி திரும்பிப் பார்த்தது. ஜிம்மி வாழைப் பழத்தைக் கீழே வைத்தது. ஒட்டைச் சிவிங்கியும் அவை எதிர்பார்த்தபடியே சுவருக்கு அப்பால் கழுத்தை நீட்டிற்று. ஜில்லியும் ஜிம்மியும் கழுத்தில் தாவி உட்கார்ந்து கொள்ளவே, மறு விநாடி காட்சிச் சாலைக்குள் வந்து குதித்தன!

"ஆஹா, பலித்தது தந்திரம்!" என்று ஆனந்தப்பட்டது ஜில்லி.

ஜிம்மியும் ஜில்லியும் வேடிக்கைகளைப் பார்த்துக் கொண்டே போய்க் கொண்டிருந்தன. ஒரு குரங்கு குட்டிக்கரணம் போட்டுக் குதித்துக் கொண்டிருந்ததைப் பார்த்து விட்டு ஜிம்மியும் ஜில்லியும் விழுந்து விழுந்து சிரித்தன.



ஜிம்மியும் ஜில்லியும் சவாரி செய்தன

"ஜில்லி! அதோ அந்த யானைக் குட்டியைப் பார்த்தாயா? நமக்குச் சௌகர்யமாக ஏணியருகில்தான் அது நின்று கொண்டிருக்கிறது. ஏணியில் ஏறி அதன் முதுகில் உட்கார்ந்து கொண்டு நாம் சவாரி செய்யலாமா?" என்று கேட்டது. "பேஷாய்ச் செய்யலாம்!" என்றது ஜில்லி.

ஜிம்மியும் ஜில்லியும் ஏணியில் ஏறி யானைக் குட்டியின் மீது உட்கார்ந்தன. யானைக்குட்டியும் நகர்ந்தது. "பலே ஜோர்! காசு கொடுக்காமல் சவாரி செய்வதென்றால் என்ன இருக்

தாலும் குஷிதான்!" என்று கத்திக்கொண்டே ஜிம்மியும் ஜில்லியும் சவாரி செய்தன.

வேகமாக வந்த யானைக் குட்டி காம்பவுண்டு சுவருக் கருகில் வந்து 'டக்'கென்று நின்றது. துதிக்கையை உயர்த்தி முதுகில் உட்கார்ந்து கொண்டிருந்த ஜில்லியையும் ஜிம்மியையும் கெட்டியாகப் பிடித்துக் காம்பவுண்டுக்கு வெளியே கொண்டு வந்து 'தொப்'பென்று போட்டது. "பயல்களா! யாரை ஏமாற்றப் பார்க்கிறீர்கள்? லட்சணமாகக் காசைக் கொடுத்து டிக்கட் வாங்கிக்கொண்டு உள்ளே வாருங்கள்" என்றது யானைக் குட்டி.

கீழே விழுந்த ஜிம்மியும் ஜில்லியும் உடம்பில் இருந்த புழுதியைத் தட்டிக்கொண்டு எழுந்தன. அவற்றின் முகத்தைப் பார்க்க மிகவும் பரிதாபமாக இருந்தது.

"இனிமேல் அப்படியெல்லாம் ஏமாற்றப் பார்க்காதீர்கள்?" என்று யானைக் குட்டி சுவருக்கு மேலே தலையை நீட்டிக் கேட்டது.

"மூஞ்சியைப் பாரு மூஞ்சியை!" என்றது ஜில்லி.

"ஜில்லி! அந்த அல்ப புத்தி பிடித்த யானைக்குட்டியுடன் நாம் பேச வேண்டாம்" என்றது ஜிம்மி.

"ஜிம்மி! ஜில்லி! இங்கே ஏன் நின்றுகொண்டிருக்கிறீர்கள்?" என்று அப்பொழுது ஒரு குரல் கேட்டது. ஜில்லியும் ஜிம்மியும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தன. அவற்றின் மாமா அங்கே நின்று கொண்டிருந்தார். "மிருகக் காட்சிச் சாலைக்கு வேடிக்கை பார்க்க அழைத்து வரலாமென்று உங்களை இத்தனை நாழியாகத் தேடினேன். வாருங்கள், போகலாம்" என்று சொல்லி மாமா மூன்று டிக்கட் வாங்கினார். அப்பொழுது மறுபடியும் யானைக்குட்டி சுவருக்கு மேலே தலையை நீட்டி, 'ஹி, ஹி, ஹி' என்று ஜிம்மியையும் ஜில்லியையும் பார்த்துச் சிரித்தது! ஆனால், ஜிம்மியும் ஜில்லியுமா அதை லட்சியம் செய்யும்? ஒய்யாரமாக நடந்து மாமாவுடன் காட்சிச் சாலைக்குள் நுழைந்தன.

## மணிக் கதை 3









அம்மா அருமையாகத் தைத்துக் கொடுத்த சட்டை இரண்டு மணிகளுக்குச் சரியாயிருக்கிறது!

# வித்தைக் கரடி

கு.ரா.

என் குழந்தைப் பருவத்தில் நாங்கள் ஒரு சிறு கிராமத்தில் வசித்து வந்தோம். 'பட்டிக்காடு' என்றால் அந்த கிராமத்தைத்தான் சொல்ல வேண்டும். அங்கிருந்து இருபதுமைல் தூரத்துக்கு ரயில் பாதை ஒன்றும் கிடையாது. கிராமத்தின் மேலண்டைப் பக்கத்தில் நீண்ட மலைத் தொடர் ஒன்று. கிழக்கே, மரங்களும் முட் செடிகளும் அடர்ந்த காட்டுப் பிரதேசம். பக்கத்துக் கிராமங்களுக்குப் போகிறவர்கள் இந்தக் காட்டுப் பிரதேசத்தில் இருந்த ஒற்றையடிப்பாதை வழியாகத்தான் பிரயாணம் செய்வார்கள்.

ஒரு நாள் பகல். மணி என்ன இருக்குமோ தெரியாது. எங்கள் ஊரில் மணி ஏது, மண்ணாங்கட்டி ஏது? நான் அடுத்த வீட்டுப் பெண் பாஞ்சாலியுடன் கழனி மேட்டில் பட்டம் விட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுது அந்தக் காட்டுப் பிரதேசத்திலிருந்து ஒரு கரடி வித்தைக்காரன் வெளிப்பட்டான்.

இந்த மாதிரி கரடி வித்தைக்காரர்கள் ஏற்கனவே இரண்டு மூன்று தடவை எங்கள் ஊருக்கு வந்திருக்கிறார்கள். இவர்கள், காட்டில் உல்லாஸமாகத் திரியும் கரடியைப் பிடித்து அதன் வாயைக் கட்டி அதை வித்தை செய்யப் பழக்குவார்கள். பிறகு ஊர் ஊராய் அழைத்துச் சென்று ஆட்டி வைத்து வயிறு வளர்ப்பார்கள்.

ஏற்கனவே பார்த்திருந்தாலும், நாங்கள் அங்கே தனியாய் இருந்ததால் எங்களுக்கு பயமாய்விட்டது. "ஐயோ கரடி!" என்று கத்திக்கொண்டு பாஞ்சாலி வீட்டை நோக்கி ஓட்டம் பிடித்தாள். நானும் பட்டத்தை அவசரம் அவசரமாய் இறக்கிக்கொண்டு அவள் பின்னால் ஓடினேன்.

"கரடி வருதுடோய் கரடி! கரடி வித்தைக்காரன் வரான்!"

சிறுவர்கள் எல்லோரும் கொம்மாளம் போட்டுக் கொண்டு தெருவில் வந்து சேர்ந்துவிட்டார்கள். வீட்டு வாயிலில் நெல்லை உலர்த்திவிட்டுக் காலினால் துளாவிக் கொண்டிருந்த பாட்டியிடம் ஓடி, "ஆயா! கரடி வருது பார். அதோ ஆயா!" என்று குதித்தாள் பாஞ்சாலி.

இந்தக் கரடி முன்பு நான் பார்த்த கரடிகள்போல் இல்லை. இது ரொம்பக் கிழக் கரடி. ஐந்தடி உயரம இருந்தது. நல்ல பருமனும்கூட. இந்தக் கரடியுடன் கூடவந்த வித்தைக்காரனும் வேறு மாதிரி இருந்தான். மற்றவர்களைப் போலவே இவன் முகத்திலும் தாடி மீசை அடர்ந்து வளர்ந்திருந்தது. ஆனால் தலையில் ஒரு பெரிய முண்டாசும், உடம்பில் ஒரு பெரிய பழைய கோட்டும் இவனிடம் புதிதாய் இருந்தன. நான் முன்பு பார்த்த வித்தைக்காரர்கள் கையில் ஒரு மணியை வைத்துக் கொண்டு ஆட்டிக் கொண்டே இருப்பார்கள். இந்த வித்தைக்காரனோ ஒரு கையில் புல்லாங்குழலும் இன்னொரு கையில் ஒரு உடுக்கையும் வைத்திருந்தான். கரடியைக் கட்டியிருந்த கயிற்றை இடது கையில் பிடித்துக்கொண்டு அந்தக் கையினாலேயே புல்லாங்குழலை வாயில் வைத்து ஊதிக் கொண்டே அவன் வலது கையிலிருந்த உடுக்கையை "டக், டக், டக்டக்—" கென்று அடித்தான். கரடி இரண்டு காலினால் நின்றுகொண்டு காலில் கட்டியிருந்த மணிகள் சப்திக்க 'தொம் தொம்' என்று குதித்துக் கொண்டே சுற்றிச் சுற்றி வந்தது.

வீட்டுக்குள்ளிருந்த பெரியவர்கள் கூட வேடிக்கை பார்க்க வெளியே வந்துவிட்டார்கள். வித்தைக்காரனுக்குக் குஷி பிறந்துவிட்டது. பாவம், அந்தக் கரடியை அன்று ஆட்டி வைத்துவிட்டான். "ஸலாம் போடுடா" என்றால் அது முன்னங்கால் இரண்டையும் நெற்றியில் வைத்துக்கொண்டு ஊ— என்று கர்ஜிக்கும். ஒரு பெரிய கம்பை அணைத்துப் பிடித்துக்கொண்டு கம்பீரமாக நடை போட்டுக் கொண்டு போகும். இது மாடு மேய்க்கப் போவதாக பாவனை. "பல்டி அடி!" என்று எஜமான் உத்தரவிட்டால் கீழே விழுந்து கர்ணம் போடும். அவன் புல்லாங்குழலை ஊதிக்கொண்டு உடுக்கை அடிக்க ஆரம்பித்தால் அவனைச் சுற்றிச் சுற்றி வந்து குதிக்கும்.

## 2

வித்தைக்காரன் வீடு வீடாய்ச் சென்று பிச்சை வாங்கினான். சில பேர் கிழிந்த துணிகளைக் கூடத் தூக்கிக் கொடுத்தார்கள். நெல் உலர்த்திக் கொண்டிருந்த பாஞ்சாலியின் ஆயா தன் குருட்டுக் கண்களால் அவனைக் கூர்ந்து பார்த்துவிட்டு "ஏண்டா அப்பா! காட்டிலே திரியற ஜீவனைப் புடிச்சு இப்படி ஆட்டி வக்கிறயே, உனக்குப் பாவ மில்லையா?" என்று கேட்டாள்.

"என்ன ஆயா பண்றது? வயத்துப் பொழப்பு" என்று வித்தைக்காரன் வயிற்றைக் காட்டினான்.

"வயத்துப் பொழப்புன்னு வேறே தொழில் இல்லையா?" என்றாள் ஆயா.

"அம்மாம் பையனா இருக்கறச்சே புடிச்ச இந்தப் பொழப்புத்தான் ஆயா" என்று வித்தைக்காரன் என்னைக் காண்பித்தான்.

அப்பொழுது வயல் பக்கத்திலிருந்து வந்து கொண்டிருந்த முன்சிப் பழனியாண்டிப் பிள்ளை வித்தைக்காரனைப் பார்த்துவிட்டு, "எவண்டா அவன்? யாரடா உன்னை இந்த ஊருக்குள்ளே விட்டது? போடா, இங்கே தலைகாட்டாதே" என்று அவனை விரட்டி விட்டு "ஞாபகம் இருக்கா ஆயா? இந்த மாதிரி கரடிக்காரன் ஒருத்தன்தான் எங்க பொன்னையாவைத் தூக்கிட்டுப் போயிட்டான். உனக்கு ஞாபகம் இருக்குல்ல?" என்றார்.

ஆயா பேசாமல் தலையை அசைத்து விட்டு நெல்லைக் கவனிக்கத் தொடங்கினாள்.

"அது என்ன ஆயா?" என்று கேட்டேன் நான்.

"ரொம்ப நாளைக்கு முன்னாலே—பழனிக்கு ஒரு தம்பி இருந்தான், அவன் பேர் பொன்னையா. அவனுக்கு அஞ்சு வயசு இருக்கறப்போ இந்த மாதிரி ஒரு வித்தைக்காரன் வந்தான். அன்னிக்கி ராத்திரி தெருவிலே விளையாடிக்கிட்டிருந்த குழந்தையைக் காணல்லே. கரடிக்காரன்தான் தூக்கிட்டுப் போயிட்டான்னு சொன்னாங்க. அப்புறம் கொழந்தை ஆப்படவே இல்லை. பாத்தியா, நீங்க இப்படித் தெருவிலே விளையாடறீங்களே. கரடிக்காரன் தூக்கிக்கிட்டுத்தான் போப்போறான். அடி பாஞ்சாலி, கேட்டுக்கோ நீயும்" என்றாள்.

நான் பாஞ்சாலியைப் பார்த்தேன். அவன் வாயைப் பிளந்து கொண்டு பயத்தோடு என்னைப் பார்த்தான். அன்று இரவு இருட்டிய பிறகு நான் வீட்டை விட்டு வெளியே வரவே இல்லை. அவ்வளவு பயமாய் விட்டது எனக்கு.

### 3

மறுநாள் பொழுது விடிந்து சூரியன் கரகர என்று மேல் நோக்கி வந்து கொண்டிருந்தான். கரடிக்காரனுக்கு பயந்து கொண்டு கழனிப் பக்கம் போகாமல் வீட்டுக் கொல்லையிலேயே பட்டத்தை நான் பறக்க விட்டுக் கொண்டிருக்கையில் தெருவில் புல்லாங் குழல் ஓசையும் "டக்டக் டக்டக்—" என்ற உடுக்கையின் சப்தமும் கேட்டன. பட்டத்தை மரத்திலே கட்டிப் பறக்க விட்டு விட்டு "கரடி! கரடி!" என்று கத்திக் கொண்டு வெளியே ஓடி வந்தேன்.

ஆனால் தெருவில் கரடியைக் காண வில்லை. கரடிக்காரன் மட்டும் முன்சிப் வீட்டு வாயிலில் நின்று கொண்டு பிச்சை கேட்டுக் கொண்டிருந்தான். கரடி எங்கே போயிற்று என்று நான் ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண் டிருக்கையில் பழனியாண்டிப் பிள்ளை உள்ளே யிருந்து ஓடி வந்து, கரடிக் காரன் கையிலிருந்த புல்லாங்குழலையும் உடுக்கையையும் பிடுங்கி ஓங்கிக் கீழே அடித்து உடைத்து விட்டார். கோபத் தினால் அவர் உடல் நடுங்கிக் கொண் டிருந்தது "ஏன்டா? உங்கிட்டே கேத்து என்ன சொன்னேன்? இந்த ஊர்ப் பக்கம் வராதேன்னு சொன் னேனா இல்லையா? ஏன் வந்தே?" என்று கர்ஜித்தார்.

வித்தைக்காரன் பயந்து விட்டான். கைகளைக் கூப்பிக் கும்பிடு போட்டுக் கொண்டே அவன், "சாமி! கோவிச் சுக்காதீங்க சாமி. என் கரடிக்கு சீக்கு வந்திடுச்சிங்க, காலெடுத்து நடக்க மாட்டேங்குதுங்க. அதான் சாமி இங்கேயே இருக்கேன். இல்லாட்டி கேத்தே வேறே ஊருக்குப் போயிருப் பேனுங்க" என்றான்.

"சீக்கு வந்துருத்தாம் சீக்கு! பொய் யைப் பாரு, பொய்யும் புளுகும்! கரடிக்கும் புலிக்கும் சீக்கு வருமா? மறுபடி உன்னை இந்தப் பக்கம் பாத்தா காலை ஒடிச்சிடுவேன்! மரியாதையாய்ப் போய் விடு" என்று விரட்டினார் பிள்ளை.

வித்தைக்காரன் உடைந்து போன தன் வாத்தியங்களைப் பரிதாபமாகப் பார்த்து விட்டு வயல்காட்டை நோக்கி நடந்தான்.

என் கண்களில் நீர் நிறைந்து விட்டது. பாஞ்சாலியையும் அழைத்துக் கொண்டு வந்து வித்தைக்காரன் போன திசையைப் பார்த்துக் கொண்டு வெகு நேரம் உட்கார்ந்திருந்தேன். அன்றெல்லாம் எனக்குப் பொழுது போக வில்லை. இரவு படுத்துக் கொண்ட பிறகும் கரடியையும் அந்த வித்தைக்காரனையும் என்னால் மறக்க முடியவில்லை. கனவிலேகூட கரடியும் அந்த வித்தைக்காரனும் தான் வந்தார்கள். பாதி இரவில் என்னவோ சப்தத்தைக் கேட்டு திடீரென்று விழித்துக் கொண்டேன். வீட்டில் பெரியவர்கள் எல்லாம் எழுந்திருந்து தெருவை நோக்கி ஓடினார்கள். தெருவில், "திருடன்! பிடி! உதை!" என்று பலவிதமான கூச்சல் கேட்டது.

வெளியே ஒரே கும்மிருட்டு. பெரிய வீட்டு வைக்கோல் போர் பிசாசு போல் நின்று கொண்டிருந்தது. ஓடினவர்கள் எல்லாம் அதைச் சுற்றிக் கும்பல் சேர்ந்து எதையோ பிடித்து இழுத்து வந்தார்கள். அப்பொழுது யாரோ விளக்கை ஏற்றிக் கொண்டு வந்து திருடன் முகத்துக்கு நேரே பிடிக்கவே நானும் நடுங்கிப் போனேன். திருடன் என்று அகப்பட்டுக் கொண்டவன் வேறு யாரும் இல்லை, கரடிக்காரன் தான். அவன் கையில் முனியம்மா வீட்டுச் சேவல் கோழி இருந்தது!

"உதையடா! குத்தடா!" என்று இரைந்தார்கள். பழனியாண்டிப்பிள்ளை எங்கிருந்தோ பாய்ந்து வந்து, 'இன்னிக்குக் கோழியைத் திருடுவான்; நாளைக்குக் குழந்தையைத் திருடுவான்! வெட்டிப் புதையுங்கடா" என்று கத்திக்கொண்டு கரடிக்காரன் கன்னத்தில் பளார் பளாரென்று நாலு அறை விட்டு அவன் உடம்பிலும் கும்கும் மென்று பல குத்துகள் விட்டார். "ஐயோ சாமி!" என்று அலறிக் கொண்டு அவன் கீழே சாய்ந்து விட்டான்.

இந்த சமயத்தில்தான் ஒரு அற்புதம் நடந்தது. பழனியாண்டிப் பிள்ளை திடீரென்று எதையோ பார்த்துவிட்டு "ஐயோ! பொன்னையா!" என்று அலறிக்கொண்டு கீழே விழுந்து கிடந்த கரடிக்காரன் மேல் விழுந்தார்.

நான் பயந்துகொண்டு வீட்டை நோக்கி ஓடியே போய் விட்டேன். அன்று பிற்பகல் பாஞ்சாலியும் நானும், நெல் உலர்த்திக் கொண்டிருந்த பாஞ்சாலியின் ஆயா எதிரில் போய் உட்கார்ந்தோம்.

"அதிருக்கட்டும் ஆயா; முன்சீப் அய்யா ஏன் கரடிக்காரன் மேலே அப்படி விழுந்தாரு?" என்று கேட்டேன் நான்.

"அந்தக் கரடிக்காரன் யார் தெரியுமா? பழனியாண்டியோட தம்பிதான். முன்னே அவனைத்தான் கொழந்தையா இருந்தபோது ஒரு கரடிக்காரன் தூக்கிண்டு போயிட்டான். அவன் கையிலே பொன்னையான்னு பச்சை குத்தி யிருந்ததாம் — பாத்தீங்களா, வயக்காட்டில் தனியா போய் விளையாட நீங்களே? அடி பாஞ்சாலி, பாத்துக்கோ!" என்றாள்.

நான் பாஞ்சாலியைப் பார்த்தேன். அவள் வாயைப் பிளந்துகொண்டு என்னைப் பார்த்தாள். அவள் கண்களில் பயம் தோன்றியது.

"ஏன் ஆயா, நிஜமாவா?" என்று கேட்டாள்.

ஆயா பதில் சொல்லவில்லை. காலினால் நெல்லைத் துளாவிக் கொண்டே சுற்றிச் சுற்றி வரத் தொடங்கினாள்.

---

## குழந்தை வளர்ப்பு—பரிசுத் திட்டம்

குழந்தை வளர்ப்புப் பரிசுத் திட்டத்தில் கலந்து கொண்டு கட்டுரை அனுப்பி வைத்த தாய்மார்கள் எல்லோருக்கும் வந்தனம் செலுத்துகிறோம்.

கீழ்க்கண்ட சகோதரியின் கட்டுரை எல்லாவற்றிலும் சிறந்ததெனத் தீர்மானிக்கப்பட்டுப் பரிசளிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமதி சுந்தரம்மாள், வாயிட் கார்னர், வாயிட்ரோட், ராயப்பேட்டை, சென்னை.

பின் வரும் சகோதரிகளின் கட்டுரைகள் அடுத்தபடியாக நன்றாயிருந்தபடியால் பிரசுரத்திற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

(1) "சசிதேவி", ஸ்ரீராகவம், பட்டமங்கலம் தெரு, மாயவரம்.

(2) ஸ்ரீமதி சேஷசயனி, நெ. 120/6, ஆறாவது கிராஸ் ரோடு, சாமராஜ பேட்டை, பெங்களூர்.

மேற்படி மூன்று கட்டுரைகளும் "கல்கி"யின் வரும் இதழ்களில் முறையாகப் பிரசுரிக்கப்படும்.



# காலக்ஷேபம்

## இவ்வளவுதானா ?

**இருளன்:**—எனக்கு ஒரு ரூபாய் கிடைக்காவிட்டால் என் கத்தியை உபயோகிக்க வேண்டியதுதான்.

**முருகன்:**—என்ன! தற்கொலை செய்து கொள்வாயோ?

**இருளன்:**—இல்லை; அதை அடகு வைத்துக் கடன் வாங்குவேன்.

—**வி. ச. முத்தையா.**

* * *

## நல்ல இடம்

**கிட்டு:**—அம்மா, உன் நாட்டுப்பெண் ராஜத்தின் கண்ணில் படாமல் இந்தப் புஸ்தகத்தை எங்கே வைச்சு வைக்கலாம்?

**தாயார்:**—இது தெரியாதாடா, உனக்கு? நம்மாத்து சமையல் உள்ளே போட்டு வையேன்!

—**கே. சுப்ரமண்யம்.**

* * *

## அதிர்ஷ்டந்தான்

**சோமு:**—"நீ வரும்போது யாரோ ஒருவன்மேல் வண்டியை விட்டு அடித்துக் கீழே தள்ளிக் காயப்படுத்தி விட்டாயாம். அவன் உன் வண்டியின் நம்பரைப் பார்த்து விட்டானாம். நாளைக்கு உன்பேரில் பிராது கொடுக்கப்போகிறதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறானே."

**ராமு:**—"என் வண்டியின் நம்பர் என்ன என்று சொன்னான்?"

**சோமு:**—"66 என்று சொன்னான்."

**ராமு:**—"அப்படியானால் நான் அதிர்ஷ்டசாலிதான். வண்டி தலைகுப்புற விழுந்திருக்கும்பொழுது பார்த்திருக்கிறான் போலிருக்கிறது. என் வண்டியின் நம்பர் 99."

—**ஜி. கே. ராமன்.**

* * *

## திவ்யமான போதனை!

ஐந்து வயது கிட்டு தன் தகப்பனாருடன் பந்து விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

**அவன்:**—பாரப்பா அங்கே! ஒரு பந்தைப் பிடிப்பதற்காக எவ்வளவு சண்டை! ஏன்? அவாளுக்கெல்லாம் தலைக்கு ஒரு பந்தைக் கொடுத்தால் இந்தச் சண்டையிராதே! **எஸ். சாமி.**

## சாமர்த்தியம்

**உபாத்தியாயர்:**—பையனைப் பார்த்து கம்பராமாயணம் இயற்றியது யார்?

**பையன்:**—தெரியாது, ஸார்!

**உபாத்தியாயர்:**—இது தெரியாதா? கம்பர் இயற்றியது கம்பராமாயணம். சரி, நளவெண்பா இயற்றியது யார்?

**பையன்:**—நளன், ஸார்!

—**எம். ஆர். எஸ். வாஸன்.**

* * *

## தெரியாத விஷயம்

**தாயார்:**—என்னடா செய்கிறாய், குழந்தாய்?

**குழந்தை:**—நானு தம்பிக்கிக் காகிதம் எழுதுகிறேன்.

**தாயார்:**—காகிதமா! உனக்கு எழுதத் தெரியாதே!

**குழந்தை:**—பரவாயில்லை அம்மா! தம்பிக்குத்தான் படிக்கத் தெரியாதே!

—**சா. சுப்பிரமண்யம்.**

* * *

## ரகசியம் எதற்கு?

பெண் எதிரே உட்கார்ந்திருக்கிறாள்.

**பிள்ளையின் தகப்பனார்** (ரகசியமாக):—ஏண்டா, இந்தப் பெண்தானா உனக்குப் பிடித்திருக்கிறது? முதுகு கூனல், கண்ணோ வக்கிரம், அழகோ சொல்ல வேண்டியதில்லை.

**பிள்ளை:**—அப்பா, நீங்கள் ரகசியமாகப் பேச வேண்டியதில்லை. அந்தப் பெண்ணுக்குக் காதும் செவிடு!

—**டி. லக்ஷ்மிநாராயணன்.**

* * *

## இஷ்டமில்லை!

தர்ம ஸ்தாபனத்திற்குப் பணம் வசூலிக்க வந்தவரிடம் ஒரு பிரபு செக் ஒன்று எழுதிக் கொடுத்தார்.

**வசூலிக்க வந்தவர்** (செக்கைப் பார்த்து விட்டு):—என்ன, இதில் கையெழுத்தில்லையே?

**பிரபு:**—தர்ம கைங்கரியத்தில் என்னுடைய பெயரைப் பிரஸ்தாபப்படுத்த இஷ்டமில்லை. —**வி. ராஜகோபாலன்.**

# மகத்தான ஆரம்பம்

C. ஹொன்னப்ப பாகவதர்
U. R. ஜீவரத்னம்
V. N. ஜானகி :
★ T. S. ஜெயா : ★
T. R. ராமசந்திரன்
M. R. சாமிநாதன்
M. S. முருகேசன்

முதலியோர் நடித்த

# ★ ★ ★ ★ தேவ

**16 - 1 - 43 சனிக்கிழமை முதல்**

காரைக்குடி — நடராஜா டாக்கீஸ்

**17 - 1 - 43 ஞாயிற்றுக்கிழமை முதல்**

திருச்சி — வெல்லிங்டன் டாக்கீஸ்
சேலம் — சென்ட்ரல் டாக்கீஸ்
பெங்களூர் — சிட்டி டாக்கீஸ்
கோவை — டைமன்ட் ஸினிமா
காஞ்சிவரம் — முருகன் டாக்கீஸ்

**20 - 1 - 43 புதன்கிழமை முதல்**

மதுரை — சிந்தாமணி டாக்கீஸ்



# கன்யா ★★★★

டைரக்ஷன் :

**R. பத்மநாபன்**

## பத்மா பிக்சர்ஸ் தயாரிப்பு

விநியோகம் :

## ஸௌத் இந்தியா பிக்சர்ஸ்

ாரைக்குடி — பெங்களூர் — பெஜவாடா

# படித்துப் பார்



## தமிழன் இதயம்

## மலைக் கள்ளன்

[ நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை; பிரசுரம்: தமிழ்ப்பண்ணை, பள்ளத்தூர்; விலை: ரூ. 2—4—0; ரூ. 2—8—0.]

காந்திமகான் பழைய இராட்டைக்குப் புத்துயிர் கொடுத்தார். தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை இராட்டைக்குச் செஞ்சீவித் தன்மையைக் கொடுத்து விட்டார். "ஆடுராட்டே" என்னும் பாட்டு தமிழகத்தில் அத்தகைய அழியாத் தன்மையைப் பெற்று விட்டது. வெகுகாலமாக தேசியப் பிரசங்க மேடைகளில் முழங்கி வந்த "ஆடுராட்டே"ப் பாட்டு இப்போது சங்கீத சபைகளிலும் முழங்கி எதிரொலி செய்யத் தொடங்கி யிருக்கிறது. இந்த "ஆடுராட்டே" பாட்டைப் பாடிய கவிஞர்தான் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை. அதைப் போல் எத்தனையோ தேசியப் பாட்டுக்களும், பக்திப் பாட்டுக்களும் பாடியிருக்கிறார். எல்லாப் பாட்டுக்களையும் திரட்டித் "தமிழன் இதயம்" என்ற பெயருடன் மிக உயர்ந்த பதிப்பாக வெளியிட்டிருக்கிறார்கள். புத்தகத்தின் பெயர் அதற்கு எவ்வளவு பொருத்த மென்பதை இந்த முதல் பாட்டு தெளிவாக்குகிறது:—

"தமிழன் என்றொரு இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு
அமிழ்தம் அவனுடைய மொழியாகும்
அன்பே அவனுடை வழியாகும்."

இந்த அரிய நூல் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரின் முன்னுரையுடனும் கவி தேசிக விநாயகம் பிள்ளையின் சாற்றுக் கவியுடனும் விளங்குகிறது.

ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை கவிஞர் மட்டுமல்ல—நல்ல வசன கர்த்தாவுங்கூட—என்பது 438 பக்கங்கொண்ட "மலைக்கள்ளன்" என்னும் பெரிய கதைப் புத்தகத்திலிருந்து தெரியவருகிறது. இன்று தமிழ் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்திருக்கும் பல உயரிய இலட்சியங்கள் இந்தச் சுவையுள்ள கதைப் புத்தகத்திலும் வெளியாகின்றன.

## நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழிமான்மியம்

[ ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை; பிரசுரம்: புதுமைப் பதிப்பகம், காரைக்குடி; விலை: ரூ. ஒன்று.]

புத்தகத்தின் பெயரைப் படித்ததும் "இது என்ன விஷயம்?" என்ற திகைப்பு பலருக்கும் ஏற்படலாம். ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் 35 பக்க முன்னுரையில் மேற்படி திகைப்பைப் போக்கி விஷயத்தை விளக்கியிருக்கிறார். விஷயம் இன்னதென்று ஒருவாறு தெரிந்துகொண்டு உள்ளே பிரவேசித்தோமானால், கண்ணீரும் சிரிப்பும் மாறி மாறி வந்து கொண்டிருக்கும். இதோ வக்கீல்கள் கேள்வி கேட்கும் சாமர்த்தியத்தைப் பற்றிக் கவி குதூகல நடையில் கூறுவதைக் கேளுங்கள்:—

'ஓடும் குதிரைக்கு உச்சியில் கொம்புகள்
ஒன்றா இரண்டா? உடன்சொலும்' என்பார்
'குதிரைக்கேது கொம்புகள்?' என்றால்
கோர்ட்டவட்சியக் குற்றம் என்பார்!
'கேள்வியை நன்றாய்க் கேட்டுச் சொல்லும்;
இரண்டா? ஒன்றா? என்பதென் கேள்வி;
உண்டா இல்லையா என்று நான் உம்மிடம்
கேட்டேனா ஓய்? காது கேட்காதோ?'
என்றெல்லாம் சொல்லி ஏமாற்றி விடுவார்
இவர், சரங்களை எடுத்துச் சொன்னால்
பீரங்கிகளும் பின்னிட்டோடும்!

## INDIA & FREEDOM

[ ஆசிரியர்: எல். எஸ். அமெரி; பிரசுரம்: ஆக்ஸ்போர்டு யுனிவர்ஸிடி பிரஸ்; விலை: ரூ. 3.]

"அமெரியே போ!" "போகவேண்டும் அமெரி!" என்றெல்லாம் எத்தனையோ தடவை கதறியாகி விட்டது. அமெரி போகிற வழியாயில்லை. கல்லுப் பிள்ளையார் மாதிரி உட்கார்ந்திருக்கிறார் இந்தியா மந்திரி பதவியில்! "அமெரி போனால்தான் இந்தியாவுக்குச் சுதந்திரம்" "இந்தியா சுதந்திரம் பெற்றால்தான் அமெரி போவார்" என்ற நெருக்கடியான நிலைமை ஏற்பட்டு விட்டது. அப்படிப்பட்ட அமெரியின் பிரசங்கங்களைத் தொடுத்து "இந்தியாவும் விடுதலையும்" என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கிறார்கள். இந்தியாவுக்கு விடுதலையளிக்கப் பிரிட்டிஷார் துடித்துக்கொண்டிருந்தும், ஏன் அது சாத்தியமில்லாம லிருக்கிறது என்பதை இப்பிரசங்கங்களில் சாங்கோபாங்கமாக நாம் அறியலாம். இன்னும் ஆழ்ந்து பார்த்தோமானால், இந்தியர்களாகிய நம்மிடம் என்ன பலவீனம் இருக்கிறது, எதனால் நாம் அமெரியைப் போகச் சொல்லிச் சுதந்திரமடைய முடியாமலிருக்கிறது என்பதையும் கண்டு கொள்ளலாம்.

## கன்னிகா ஸ்திரீ

[ ரா. ஆறுமுகம், ரா. வெங்கடாசலம்; பிரசுரம்: புதுமலர் நிலையம், கோயமுத்தூர்; விலை: ரூ. 1.]

"தமிழ் நாட்டு மறுமலர்ச்சியில் எத்தனையோ சிறுகதை ஆசிரியர்கள் தோன்றியிருக்கிறார்கள். எவ்வளவோ விதவிதமான அழகுகளுடன் புதிய நடையில் எழுதுகிறார்கள்" என்பதற்கு இந்தச் சிறுகதைப் புத்தகம் இன்னொரு அத்தாட்சியாகும்.



# பார்த்திபன் கனவு

கல்கி




## முப்பத்து நான்காம் அத்தியாயம்

## "ஆகா! இதென்ன?"

விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள்மீது தாவி ஏறிக் கொண்டார்கள்.

"பொன்னா! முண்டாசு கட்டி மீசை வைத்துக் கொண்டிருந்த வண்டிக்காரன் யார்? நீதானே?" என்று குதிரைகள் போய்க் கொண்டிருக்கும்போதே விக்கிரமன் கேட்டான்.

"ஆமாம், மகாராஜா!"

"சிறைக்குள்ளிருந்த போது நீ என்னை மறந்து விட்டாயாக்கும் என்று நினைத்தேன்."

"நான் ஒருவேளை மறந்தாலும், என்னை மறக்க விடாதவர் ஒருவர் இருக்கிறாரே?"

"யார் அது?"

"வேறு யார்? தங்களை யமன் வாயிலிருந்து மீட்ட தேவிதான்."

இதைக் கேட்டதும் விக்கிரமனுடைய உள்ளம் மகிழ்ச்சியினால் துள்ளிற்று. குந்தவியைப் பற்றி மேலும் விசாரிக்க வேண்டுமென்ற ஆவல் உண்டாயிற்று. ஆனால், சிறிது தயக்கமாகவும் இருந்தது.

சற்றுப் பொறுத்து, "எங்கே போகிறோம் இப்போது?" என்றான் விக்கிரமன்.

"மாமல்லபுரத்துக்கு, மகாராஜா!"

"பொன்னா!"

"என்ன, மகாராஜா?"

"நாளைக் காலைக்குள் மாமல்லபுரம் போய்விட வேண்டும்."

"ஆம், மகாராஜா! அதனால்தான் 'ஒரு கணம்கூடத் தாமதிப்பதற்கில்லை' என்று நான் சொன்னேன்."

"நாளை மத்தியானம் வரையில் அங்கே கப்பல் காத்துக் கொண்டிருக்கும்."

"அதற்குள் நாம் போய்விடலாம், மகாராஜா!"

விக்கிரமன் சற்றுப் பொறுத்து மறுபடியும், "தேவி எங்கே இருக்கிறார், பொன்னா! அவரிடம் கடைசியாக ஒரு தடவை விடைபெற்றுக் கொண்டு கிளம்பியிருந்தால், எவ்வளவோ சந்தோஷமாயிருந்திருக்கும்" என்றான்.

"அது முடியாது, மகாராஜா!"

"எது முடியாது?"

"தேவியிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்புவது."

"ஆமாம்; முடியாதுதான்! இனி உறையூருக்கு மறுபடியும் எப்படிப் போக முடியும்?"

"தேவி உறையூரில் இல்லை, மகாராஜா!"

"தேவி உறையூரில் இல்லையா? பின், எங்கே, பொன்னா?"

"மாமல்லபுரத்தில்!"

"ஆ!" என்றான் விக்கிரமன். சில நாளாகச் சிறைப்பட்டிருந்த பிறகு விடுதலை யடைந்த உற்சாகம், குளிர்ந்த இரவு நேரத்தில் குதிரைமீது செல்லும் கிளர்ச்சி, இவற்றுடன், "குந்தவி மாமல்லபுரத்தில் இருக்கிறாள்" என்னும் செய்தியும் சேர்ந்து அவனுக்கு எங்கேயோ ஆகாயத்தில் பறப்பதுபோன்ற உணர்ச்சி உண்டாயிற்று.

"அப்படியானால், அவரிடம் விடை பெற முடியாது என்று சொன்னாயே, ஏன், பொன்னா? ஒருகண நேரமாவது அவரை நான் அவசியம் பார்க்க வேண்டும். பார்த்து நன்றி செலுத்த வேண்டும். அதோடு என் தாயாரைக் கண்டு பிடித்துப் பாதுகாக்கும் பொறுப்பையும் அவரிடம் ஒப்புவிக்க வேண்டும்."

"அதுதான் முடியாது" என்றான் பொன்னன்.

"ஏன் அவ்வளவு உறுதியாகச் சொல்கிறாய்?"

"தேவியின் உறுதி எனக்குத் தெரிந்திருப்பதினால்தான். தங்களுக்கு விடை கொடுத்து அனுப்பும் உத்தேசம் அவருக்குக் கிடையாது. தங்களோடு அவரும் புறப்படச் சித்தமா யிருக்கிறார். நாம் போய்ச் சேர்வதற்குள் ஒரு வேளை அவர் கப்பலில் ஏறிக் கொண்டு காத்திருப்பார்!"

"ஆகா! நிஜமாகவா?—இவ்வளவு முக்கியமான செய்தியை முன்னமே எனக்கு ஏன் சொல்லவில்லை, பொன்னா!"

"இப்போது கூட நான் சொல்லியிருக்கக்கூடாது. தாங்கள் கப்பலில் ஏறிய பிறகு தங்களை அதிசயப்படுத்த வேண்டும் என்று தேவி உத்தேசித்திருந்தார். அவசரப்பட்டுச் சொல்லி விட்டேன்" என்றான் பொன்னன்.

விக்கிரமன் சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். திடீரென்று "அதோ பாருங்கள், மகாராஜா!" என்று பொன்னன் கூறியதும் விக்கிரமன் சிறிது திடுக்கிட்டுப் பார்த்தான். சாலையில் ஒரு பக்கத்து மரத்தடியில் பத்துப் பன்னிரண்டு பேர் கும்பலாக நின்றார்கள். அவர்களில் ஒருவன் தீவர்த்தி வைத்துக் கொண்டிருந்தான். தீவர்த்தி வெளிச்சத்தில் அவர்களுடைய உருவங்கள் கோரமான காட்சி அளித்தன. அவர்களுடைய கழுத்தில் கபால மாலைகள் தொங்கின. அவர்களுடைய கைகளில் கத்திகள் மின்னின. நெற்றியில் செஞ்சந்தனமும் குங்குமமும் அப்பிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் நின்ற இடத்தைக் குதிரைகள் தாண்டியபோது ஒரு கணம் விக்கிரமனுக்கு உடம்பு நடுங்கிற்று. அவர்களைக் கடந்து சிறிது தூரம் சென்றதும் "அப்பா! என்ன கோரம்?" என்றான் விக்கிரமன்.

"மகாராஜா! தங்களுக்காகத்தான் இங்கே இவர்கள் காத்திருக்கிறார்கள். இவர்களிடம் தங்களை ஒப்புவித்து விடும்படிதான் மாரப்பபூபதி கடைசியாகத் தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டார். நான் இவர்களை முந்திக்கொண்டேன். தாங்கள் குதிரை மேல் இவ்விதம் தனியாகப் போவீர்கள் என்று இவர்கள் எதிர் பார்த்திருக்கமாட்டார்கள். இன்னும் ரொம்ப நேரம் காத்திருப்பார்கள். பிறகு, கபால பைரவரிடம் போய்த் தாங்கள் வரவில்லை என்று தெரிவிப்பார்கள். இன்று கபால பைரவருக்கு மாரப்ப பூபதிமேல் பிரமாதமான கோபம் வரப்போகிறது" என்றான் பொன்னன்.

"பொன்னா! சக்கரவர்த்தியின் சிரஸாக்கினை, காபாலிகர்களின் பலி—இந்த இரண்டு வித ஆபத்துக்களிலிருந்து மல்லவா என்னை நீ தப்புவித்திருக்கிறாய்? முன்னே, காட்டாற்றில் போனவனை எடுத்து உயிர் கொடுத்துக் காப்பாற்றினாய். சோழ வம்சத்தின் குல தெய்வம் உண்மையில் நீதான், பொன்னா! உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? நாளைய தினம் உன்னைவிட்டுப் பிரிவேன். மறுபடியும் எப்போது காண்பேனோ, என்னமோ?"

"லட்சணந்தான்!" என்றான் பொன்னன்.

"என்ன சொல்கிறாய்?"

"என்னை விட்டாவது, தாங்கள் பிரியவாவது?"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

"இன்னொரு தடவை தங்களைக் கப்பலில் அனுப்பிவிட்டு நான் இங்கே இருப்பேன் என்று நினைக்கிறீர்களா? இங்கே எனக்கு என்ன வேலை? வள்ளி

ஏற்கெனவே குந்தவி தேவியுடன் மாமல்லபுரத்தில் இருக்கிறாள். நானும் அவளும் தங்களுடன் வரப் போகிறோம். தாங்கள் தடை சொல்லக் கூடாது. சொன்னாலும் கேட்க மாட்டோம்.''

விக்கிரமன் சற்று மௌனமாயிருந்து விட்டு, "பொன்னா! நீ சொல்வது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சி யளிக்கிறது. நீயும் வள்ளியும் என்னுடன் வந்தால், சோழநாடே வருகிறமாதிரி தான். ஆனால், ஒரு விஷயந்தான் என் மனதை வருத்திக் கொண்டிருக்கிறது. மகாராணியின் கதி என்ன? அவரை யார் தேடிக் கண்டு பிடிப்பார்கள்? அவருக்கு யார் என்னைப்பற்றிச் சொல்வார்கள்?—நான் தாய்நாட்டுக்கு வந்தின் முக்கிய நோக்கம் மகாராணியைப் பார்ப்பதற்கு. அவரைப் பார்க்காமலே திரும்பிப் போகிறேன். அவருக்கு யாராவது என்னைப்பற்றிச் செய்தி சொல்லக்கூட இருக்க வேண்டாமா?'' என்றான்.

பொன்னனுடைய மனதிலும் இந்த விஷயம் உறுத்திக் கொண்டிருந்தது. சிவனடியாரிடம் தான் சொன்னபடி ஒன்றுமே செய்யவில்லை. அவர் என்ன ஆனாரோ, என்னமோ? மகாராணியை ஒருவேளை கண்டு பிடித்திருப்பாரோ?-

பொன்னனுடைய மனதில் சமாதானம் இல்லாவிட்டாலும், வெளிப்படையாக, "மகாராணியைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம், மகாராஜா! அவரைச் சிவனடியார் பாதுகாப்பார். சிவனடியாரால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. மகா சக்தி வாய்ந்தவர்'' என்றான்.

"ஆமாம்; அவர் நம்மை மாமல்லபுரத்துக்கருகிலுள்ள சிற்ப வீட்டில் சந்திக்கச் சொன்னாரல்லவா?''

"அது இப்போது முடியாத காரியம். சிவனடியாரைப் பார்க்கத் தங்கினோமானால், கப்பலைப் பிடிக்க முடியாது.''

"உண்மைதான். ஆனாலும் அன்னையையும் சிவனடியாரையும் பார்க்காமல் போவதுதான் மனதிற்கு வேதனை அளிக்கிறது'' என்றான் விக்கிரமன்.

அப்போது "ஆகா! இதென்ன?'' என்று வியப்புடன் கூவினான் பொன்னன்.

இதற்குள் அவர்கள் காட்டாற்றைச் சமீபித்து அதன் இக்கரையிலுள்ள மகேந்திர மண்டபத்துக் கருகில் வந்து விட்டார்கள். அந்த மண்டபத்தின் வாசலில் தோன்றிய காட்சி தான் பொன்னனை அவ்விதம் வியந்து கூவச் செய்தது. அங்கே ஏழெட்டு ஆட்கள் ஆயுதபாணிகளாக நின்றார்கள். இரண்டுபேர் கையில் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தார்கள். மண்டபத்தின் வாசல் ஓரமாக ஒரு பல்லக்கு வைக்கப்பட்டிருந்தது.

"இன்று இராத்திரி என்னவெல்லாமோ ஆச்சரிய சம்பவங்கள் நடைபெறுகின்றன'' என்று பொன்னன் முணுமுணுத்தான்.

"இந்த வேளையில் இங்கே யார்' பொன்னா!'' என்றான் விக்கிரமன்.

"தெரியவில்லை, மகாராஜா!''

"பார்த்துவிட்டுப் போகலாமா?''

"இவர்கள் காபாலிகர்கள் இல்லை, நிச்சயம். வேறு யாராயிருக்கலாம்?''

"இந்த மண்டபத்தில் தானே பொன்னா, நான் சுரமாய்க் கிடந்ததும், நீ என்னை விட்டுப் போனதும்?''

"ஆமாம், மகாராஜா! ஒரு வேளை குந்தவி தேவிதான் நமக்கு உதவிக்காக இன்னும் சில ஆட்களை அனுப்பியிருக்கிறாரோ, என்னமோ? ஆனால், பல்லக்கு என்னத்திற்கு?''

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே மகேந்திர மண்டபத்தின் வாசல் வந்துவிட்டது. குதிரைகளை இருவரும் நிறுத்தினார்கள். அங்கு நின்ற ஆட்களில் ஒருவனை எங்கேயோ பார்த்ததாகப் பொன்னனுக்கு நினைவு வந்தது. எங்கே பார்த்திருக்கிறோம்?—ஆகா! திருச்செங்காட்டாங்குடியில்! பரஞ்சோதி அடிகளின் ஆள் குமரப்பன் இவன். அந்த மனிதனும் பொன்னன் முகத்தைப் பார்த்து அடையாளம் தெரிந்துகொண்டான்.

"ஓ! பொன்னனா?'' என்று அவன் ஆச்சரியத்துடன் கூறி, "பொன்னா! சமாசாரம் தெரியுமா? உறையூர் மகாராணி அகப்பட்டுவிட்டார்! இதோ இந்த மண்டபத்துக்குள்ளே இருக்கிறார். உன்னைப்பற்றிக் கூட விசாரித்தார்'' என்றான்.

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

## தாயும் மகனும்

"மகாராணி அகப்பட்டு விட்டார்" என்ற வார்த்தைகளைக் கேட்டதும் விக்கிரமனுக்கும் பொன்னனுக்கும் உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிற்று. இருவரும் குதிரை மேலிருந்து கீழே குதித்தார்கள்.

அப்போது உள்ளேயிருந்து "குமரப்பா! யார் அங்கே? பொன்னன் குரல் மாதிரி இருக்கிறதே!" என்று ஒரு பேச்சுக் குரல் கேட்டது. அது மகாராணி அருள்மொழி தேவியின் குரல்தான்.

"அம்மா!" என்று அலறிக் கொண்டு விக்கிரமன் மகேந்திர மண்டபத்துக்குள் நுழைந்தான். பொன்னனும் பின்னோடு சென்றான்.

அப்போது அந்த இருளடைந்த மண்டபத்துக்குள்ளேயிருந்து ஒரு பெண் உருவம் வெளியே வந்தது. அது அருள்மொழி ராணியின் உருவந்தான். ஆனால், எவ்வளவு மாறுதல்? விக்கிரமன் கடைசியாக அவரைப் பார்த்தபோது இன்னும் யௌவனத்தின் சோபை அவரை விட்டுப் போகவில்லை. இப்போதோ முதுமைப் பருவம் அவரை வந்தடைந்து விட்டது. மூன்று வருஷத்திற்குள் முப்பது வயது அதிகமானவராகக் காணப்பட்டார்.

விக்கிரமன் ஒரே தாவில் அவரை அடைந்து கீழே சாஷ்டாங்கமாய்க் கீழே விழுந்து அவருடைய கால்களைப் பற்றிக் கொண்டான். அருள்மொழி ராணி கீழே உட்கார்ந்து விக்கிரமனுடைய தலையைத் தூக்கித் தன் மடி மீது வைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

விக்கிரமனைப் பின் தொடர்ந்து மண்டபத்துக்குள் நுழைந்த பொன்னன் மேற்படி காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். தற்செயலாக அவனுடைய பார்வை மண்டபத்தின் ஒரு பக்கத்தில் கட்டுண்டு கிடந்த உருவத்தின் மேல் விழுந்



திது. மங்கலான தீவர்த்தியின் வெளிச்சத்தில் அது குள்ளனுடைய உருவம் என்பதைப் பொன்னன் கண்டான்.

பொன்னனுடைய பார்வை குள்ளன் மீது விழுந்ததும் குள்ளன் "ஹீ ஹீ ஹீ" என்று சிரித்தான்.

அந்த சிரிப்பைக் கேட்டு விக்கிரமனும் அவனைப் பார்த்தான். உடனே அவன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து, "பொன்னா!" என்றான்.



"ஆம், மகாராஜா! மாமல்லபுரத்திலிருந்து தங்களுக்கு வழி காட்டிவந்த சித்திர குப்தன்தான் இவன்" என்றான்.

குள்ளன் மறுபடியும் "ஹீ ஹீ ஹீ" என்று சிரித்து, "நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்? உங்களுக்காகக் காளியம்மன் காத்திருக்கிறாளே?" என்றான்.

அருள்மொழி ராணி எல்லாரையும் மாறி மாறிப் பார்த்தாள். யாரை என்ன கேட்பது என்று தெரியாமல் திகைப்பவளாகக் காணப்பட்டாள். கடைசியில் பொன்னனைப் பார்த்து, "பொன்னா! எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டது போலிருக்கிறது. அந்த மலைக் குகையில் எத்தனை நாள் இருந்தேன் என்பதே தெரியாது. கடைசியில் அருவியில் விழுந்து உயிரை விடலாம் என்று எத்தனித்த போது சிவனடியார் வந்து தடுத்துக் காப்பாற்றினார். 'உன் பிள்ளை திரும்பி வந்திருக்கிறான், அவனை எப்படியும் பார்க்கலாம்' என்று தைரியம் கூறினார். நீயும் என்னைத் தேடிக் கொண்டிருந்ததாகவும், விக்கிரமனுக்கு ஒத்தாசை செய்யப் போயிருப்பதாகவும் சொன்னார். பொன்னா! காட்டாற்று வெள்ளத்திலிருந்து விக்கிரமனை நீ காப்பாற்றினாயாமே?" என்றாள்.

அப்போது விக்கிரமன், "வெள்ளத்திலிருந்து காப்பாற்றியதுதானா, அம்மா! சக்கரவர்த்தியின் சிரசாக்கினையிலிருந்து — காளிக்குப் பலியாவதிலிருந்து—இன்னும் எவ்வளவோ விதத்தில் பொன்னன் என்னைக் காப்பாற்றினான்" என்றான்.

"காளிக்குப் பலியா?" என்று சொல்லிக் கொண்டு அருள்மொழி நடுநடுங்கினாள்.

குள்ளன் மறுபடியும் "ஹீ ஹீ ஹீ" என்று பயங்கரமாய்ச் சிரித்தான்.

"பலி! பலி! இன்று ராத்திரி ஒரு பெரிய பலி—விழப்போகிறது—காளியின் தாகம் அடங்கப் போகிறது" என்றான்.

எல்லாரும் அவனையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இன்று அர்த்த ராத்திரியில் சிவனடியார் பலியாகப் போகிறார். மகா காளியின் சாம்ராஜ்யம் ஸ்தாபிக்கப்படப் போகிறது. அப்புறம்........ ஆஹா ஹா!......அப்புறம்.........இந்த தேசத்தில் மண்டை ஓட்டுக்குப் பஞ்சமே இராது!" என்றான் குள்ளன்.

விக்கிரமன் அப்போது துள்ளி எழுந்து, "பொன்னா! இவன் என்ன உளறுகிறான்? சிவனடியாரைப் பற்றி........." என்றான்.

"ஹிஹிஹி! உளறவில்லை. உண்மையைத்தான் சொல்கிறேன். சிவனடியாரை இத்தனை நேரம் காலையும் கையையும் கட்டிப் பலி பீடத்தில் போட்டிருப்பார்கள். சரியாக, நடுநிசி ஆச்சோ, இல்லையோ, கத்தி கழுத்திலே விழும்!", என்றான்.

அப்போது அருள்மொழி தேவி விக்கிரமனைப் பார்த்து, "குழந்தாய்! இவன் முன்னமேயிருந்து இப்படித்தான் சொல்லி என்னை வேதனைப் படுத்திக் கொண்டிருக்கிறான். ஐந்தாறு நாளைக்கு முன்னால் சிவனடியார் நானிருந்த மலைக்குகைக்கு வந்து, சீக்கிரத்தில் என்னை மீட்டுக்கொண்டு போக ஆட்கள் வருவார்கள் என்று தெரிவித்தார். அந்தப்படியே இவர்கள் வந்து என்னை மீட்டுக்கொண்டு வந்தார்கள். வழியில் மறைந்து நின்ற இந்தக் குள்ளனையும் பிடித்துக் கொண்டு வந்தார்கள். இங்கு வந்து சேர்ந்தது முதல் இவன் இன்று ராத்திரி சிவனடியாரைக் காபாலிகர்கள் பலிகொடுக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். ஐயோ! எப்பேர்ப்பட்ட மகான்! நமக்கு எத்தனை ஒத்தாசை செய்திருக்கிறார்?......குழந்தாய்! அவருடைய நினைவினால்தான், இத்தனை நாள் கழித்து உன்னைக் கண்ட மகிழ்ச்சியைக் கூட என்னால் நன்றாக அநுபவிக்க முடியவில்லை" என்றாள்.

விக்கிரமன் பொன்னனைப் பார்த்து, "பொன்னா! நீ என்ன சொல்கிறாய்? இந்தக் கொடும் பாதகத்தைத் தடுக்காவிட்டால் நாம் இருந்து என்ன பிரயோஜனம்?" என்றான்.

"அதெப்படி முடியும், மகாராஜா! உங்கள் நிலைமையை மறந்து பேசுகிறீர்களே! நாளைப் பொழுது விடிவதற்குள் மாமல்லபுரம் போய்ச் சேராவிட்டால்......?"

"சேராவிட்டால் என்ன? கப்பல் போய்விடும். அவ்வளவுதானே?"

அப்போது பொன்னன் அருள்மொழி ராணியைப் பார்த்து, "அம்மா! இவரைப் பெரும் அபாயம் சூழ்ந்திருக்கிறது. தேசப்பிரஷ்டமானவர் திரும்பி வருவதற்குத் தண்டனை என்னவென்று தங்களுக்குத் தெரியாதா? இவர் இங்கே வந்திருப்பது மாரப்ப பூபதிக்குத் தெரிந்து காஞ்சி சக்ரவர்த்திக்கும் தெரியப் படுத்தி விட்டார். நாளைக் காலைக்குள் இவர் மாமல்லபுரம் போய்க் கப்பலில் ஏறியாக வேண்டும். இல்லாவிட்டால் இவர் தப்புவது அரிது. இப்போது சிவனடியாரைக் காப்பாற்றுவதற்காகப் போனால், பிறகு இவருடைய உயிருக்கே ஆபத்துத்தான். நீங்களே சொல்லுங்கள், இவர் என்ன செய்ய வேணுமென்று" என்றான்.

அருள்மொழி ராணி பெருந் திகைப் புக்குள்ளானாள்.

விக்கிரமன் அன்னையைப் பார்த்து, "அம்மா! பார்த்திப மகாராஜாவின் வீரபத்தினி நீ! இந்த நிலைமையில் நான் என்ன செய்ய வேண்டும், சொல்! நமக்குப் பரோபகாரம் செய்திருக்கும் மகானுக்கு ஒரு ஆபத்து வந்திருக்கும் போது, என்னுடைய உயிருக்குப் பயந்து ஓடுவதா? என் தந்தை உயிரோடிருந்தால் இப்படி நான் செய்வதை விரும்புவாரா?" என்றான்.

"சுவரை வைத்துக் கொண்டுதானே அம்மா, சித்திரம் எழுத வேண்டும்? இவர் பிழைத்திரா விட்டால் பார்த்திப மகாராஜாவின் கனவுகளை நிறைவேற்றுவது எப்படி?" என்றான் பொன்னன்.

அருள்மொழி ராணி இரண்டுபேரையும் மாறிமாறிப் பார்த்தாள். கடைசியில், பொன்னனைப் பார்த்து,

"பொன்னு! நீ என்ன நினைப்பாயோ என்னமோ? என்னைக் கல் நெஞ்சமுடையவள், பிள்ளையிடம் பாசமில்லாதவள் என்று ஒருவேளை நினைப்பாய். ஆனாலும், என் மனதிலுள்ளதைச் சொல்கிறேன். நமக்கு எவ்வளவோ உபகாரம் செய்திருக்கும் ஒருவருக்கு ஆபத்து வந்திருக்கும்போது, என் பிள்ளை உயிருக்குப் பயந்து ஓடினான் என்ற பேச்சைக் கேட்க நான் விரும்பவில்லை" என்றாள்.

உடனே, விக்கிரமன், தாயாரின் பாதங்களில் நமஸ்கரித்து எழுந்து, "அம்மா! நீதான் வீரத் தாய்; பார்த்திப மகாராஜாவுக்குரிய வீர பத்தினி" என்று குதூகலத்துடன் உரைத்தான்.

பிறகு, பொன்னனைப் பார்த்து, "கிளம்பு, பொன்னு! இன்னும் என்ன யோசனை?" என்றான்.

"எங்கே கிளம்பிப் போவது? பலி எங்கே நடக்கிறதென்று நமக்கு எப்படித் தெரியும்?" என்றான் பொன்னன்.

"ஹீஹீஹீ! நான் வழி காட்டுகிறேன். என்னைக் கட்டவிழ்த்து விடுங்கள்" என்று சித்திரகுப்தனின் குரல் கேட்டது.

பொன்னன் உடனே வாசற் பக்கம் போய்க் குமரப்பனுடன் ஏதோ பேசி விட்டு வந்தான். பிறகு, குள்ளனுடைய கட்டுக்கள் அவிழ்க்கப் பட்டன. அவன் கையில் ஒரு தீவர்த்தியைக் கொடுத்தார்கள். விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மேல் ஏறிக் கொண்டார்கள். குள்ளன் கையில் தீவர்த்தியுடன் மேற்கு நோக்கிக் காட்டு வழியில் விரைந்து செல்ல, விக்கிரமனும் பொன்னனும் அவனைத் தொடர்ந்து பின்னால் சென்றார்கள்.

---

# யார் எவர்? - பரிசுத் திட்டம்

தமிழ்நாட்டுக் குழந்தைகள்—அதிலும் "கல்கி" படிக்கும் குழந்தைகள்—புத்திசாலிகளாய்த்தானிருப்பார்கள் என்று நாம் எதிர் பார்த்ததுதான். ஆனால் இப்படி நமது 'யார் எவர்? பரிசுத் திட்டத்தைத் தோல்வி யடையும்படி செய்வார்களென்று எதிர்பார்க்கவில்லை. மொத்தம் 747 சிறுவர் - சிறுமிகள் சரியான விடை அனுப்பி யிருக்கிறார்கள். ரூ. 25 பெறுமான புத்தகங்களை 747 பேருக்கு எப்படிப் பகிர்ந்து கொடுப்பது?

ஆயினும், இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டு சரியான விடை அனுப்பி வைத்த குழந்தைகளுக்கு ஏதாவது ஒரு ஞாபகார்த்தம் வேண்டாமா?

எனவே, சரியான விடை அனுப்பிய ஒவ்வொரு குழந்தைக்கும் அடுத்த பிப்ரவரி 1உ "கல்கி" இதழைப் பரிசாக அனுப்பி வைக்கத் தீர்மானித்திருக்கிறோம்.

இதன் பிரகாரம், ரூ. 25க்குப் பதிலாக ரூ. 150 நாம் செலவு செய்ய வேண்டி யிருக்கிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

பரிசாக அனுப்பப் பெறும் ஒவ்வொரு "கல்கி" பிரதியின் மேலட்டையிலும் "யார் எவர் பரிசு" என்று முத்திரை குத்தப்பட்டிருக்கும்.

சரியான விடை அனுப்பிய குழந்தைகள் எல்லாரும் தபால்காரர்களிடம் முன்னதாகவே சொல்லி வைத்து, பிப்ரவரி 1உ யன்று "கல்கி" இதழை எதிர் பார்த்துப் பெற்றுக் கொள்ள வேணும்.

## சரியான விடை

"யார் எவர்?" பரிசுத் திட்டத்தில் வெளியான பிரமுகர்கள், பின்வரும் முறையில், ஒருவருடைய உடையை ஒருவர் மாற்றி அணிந்துகொண்டிருந்தார்கள் :—

**(1) மகாத்மா காந்தி—சியாங்காய் ஷேக். (2) சர்ச்சில்—சத்தியமூர்த்தி. (3) ரூஸ்வெல்ட்—மௌலானா அபுல்கலாம் ஆஸாத். (4) ராஜாஜி—ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ். (5) முஸோலினி—முத்துரங்க முதலியார். (6) ஜவாஹர்லால் நேரு—ஸ்டாலின். (7) ஜின்னா—ஹிட்லர். (8) ஈ. வே. ராமசாமி நாயக்கர்—அமெரி.**

நாடெங்கும்
அழகிற் சிறந்த மாதர்கள்
உவந்து உபயோகிப்பது





## மைசூர் சந்தன சோப்

அது அவர்களது அழகை நன்கு பாதுகாக்கிறது. இந்த சோப் ஒன்றுதான் தங்களது அழகை பாதுகாக்கவல்லது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள்

# மைசூர் சந்தன சோப்

---

"முத்தமிழ்க்கலா வித்துவ ரத்ன"

## T. K. S. சகோதரர்களின் நாடக ஆரம்ப விழா !

"பாலக்காடு" கௌடர் பிக்சர் பாலசில்

மதுரை ஸ்ரீ பாலஷண்முகானந்த சபையாரால்

மதுரையில் "108" நாட்கள் நடித்து வெற்றிக்கொடி நாட்டிய

# சிவலீலா நாடகம்

(உரிமை பெற்றது)

"By சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர்"

18—1—43 திங்கட்கிழமை முதல் 31—1—43 வரை
தினமும் இரவு 10—30—மணிக்கு நடைபெறும்

எதிர்பாருங்கள் ! "ராஜ பாத்ருஹரி"

T. K. S. சகோதரர்கள் உரிமையாளர்கள்



# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"




நாகஸ்வர வித்வான் திருவெண்காடு

## பி. ஸுப்ரமண்ய பிள்ளையின்

| | |
|---|---|
| புதிய<br>"எச். எம். வி."<br>ரிகார்டு | ஸிம்மேந்திர மத்திமம்<br>2 பாகங்கள்<br>N. 8993 |

இவரது மற்ற ரிகார்டுகளையும் கேட்காதிருந்தால் இன்றே வாங்கிவிடுங்கள்.

எல்லா எச். எம். வி. கிராமபோன் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

**"எச். எம். வி." எஃகு ஊசிகள்**

சில்லறையில் விற்க அனுமதித்த விலை 200 ஊசிகள்
அடங்கிய டப்பி 1-க்கு ரூ. 1—8—0 மட்டுமே

Regd. No. M. 4392

ரேடியோ என்ற பெயரிலேயே  முதன்மையானது மகத்தானது



## மாடல்கள் 822, 1942 மாடல்

## எட்டு வால்வ் ஸூபரெட் பாட்டரி வைபரேடர் டேபிள் மாடல்

உங்கள் வீட்டில் எலெக்ட்ரிக் மெயின் சப்ளை இல்லை என்றாலும் பாதகமில்லை. இந்த பூலோகத்தின் ஸகல அதிசயங்களையும் ஆனந்தங்களையும் இப்புதிய பாட்டரி வைப்ரேடர் மாடலில் கேட்டு அனுபவிக்கலாம். இது தேவையான 'கரன்ட்'டை ஒரு ஆறுவோல்ட் பாட்டரியிலிருந்து செறவித்துக் கொள்கிறது. ஆனால் மெயின் சப்ளையிலிருந்து எடுக்கும் கரன்டினால் வேலைசெய்யும் மாடலைப்போலவே அற்புதமாக வேலைசெய்கிறது. இப்பாரந்த உலகில் நடக்கும் பற்பல 'பிராட்காஸ்ட்'களையும் தத்ரூபமாகக் கேட்டு ஆனந்திக்கலாம்.

### விவரங்கள்

வேவ் ரேஞ்ச் : 13.5-90 முதல் 190-565 மீட்டர் வரை. * வர்னியர் ஸ்கேலுடன் கூடிய டையா ரேஷியோ ட்யூனிங் * தொடர்ந்து மாறும் ட்யூன் கன்ட்ரோல் * ஆடோமாடிக் வால்யூம் கன்ட்ரோல் * கரன்ட் சப்ளை : 6 வோல்ட் கார் டைப் பாட்டரி



கன்ஸம்ஷன் : சுமாராக 1-6 ஆம்பியர்ஸ், லௌட்ஸ்பீகர் 8½" அங். டையா பெர்மனன்ட் மாக்னெட் கூடிய ஸர்குலர். அவுட்புட் 2.8 வாட்ஸ் (மாக்ஸிமம்) எக்ஸ்ட்ரா லௌட் ஸ்பீகருக்கும், க்ராமபோன் பிக்கப்புக்கும் ஸாக்கட்டுகள்

பாட்டரி நீங்கலாக விலை ரூ. 545

சென்னை ராஜதானிக்கு ( சமஸ்தானங்கள் உள்பட ) பிரதான டீலர்கள் :

ஸூபர் ரேடியோ கம்பெனி லிமிடெட், மௌன்ட்ரோடு, மதராஸ்

# மார்க்கோனிபோன்

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

ஸ்ரீ ராம விலாஸ் ஸர்வீஸ் லிமிடெட்.,

மௌன்ட் ரோடு :: மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.